1025

உ

சிவமயம்.

# திருவிரட்டைமணிமாலை.
# மயின்மலைச்சந்தவிருத்தம்.
# குன்றைச்சிலேடைவெண்பா.
# காழிச்சிலேடைவெண்பா.
# தில்லைச்சிலேடைவெண்பா.
# திருவாரூரந்தாதி.
# திருவாலவாயந்தாதி.

இவை

ஸ்ரீ வன்றொண்டரவர்கள்

மாணாக்கருள் ஒருவரும்

காரைக்குடி

ராம. கு. இராமநாதச்செட்டியார்

குமாரருமாகிய

சொக்கலிங்கச்செட்டியார்

இயற்றி,

பெரி. நா. சொக்கலிங்கச்செட்டியார்

கேட்டுக்கொண்டபடி

தேவகோட்டை:

திருநாவுக்கரசு நாயனார் அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பட்டன.

ஏவிளம்பி ஞு புரட்டாசி மீ.

1897

இப்பிரபந்தங்களுள்ளே சில கவிகளில் யமக மு. லியனநோக்கி ஙகரத்துக்கு னகரம் போடப்பட்டிருக்கும்.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

## ஸ்ரீ வன் ஜெ ண் ட ர வ ர் க ள்

மாணாக்கருள் ஒருவராகிய

## ராம. கு. மெ. மெய்யப்பசெட்டியார்

இ ய ற் றி ய து.

பொற்கமல மலர்செறிந்த பூங்கமலத் தடமூர்த்தி பொலிய மேவிச், சொற்கமலங் கனிவளஞ்சா ஜெண்மைதிகழ் நன்மது ரைத் தூயவைப்பி, லெற்கமலந் தருசித்தி யிபமுகத்தெம் பெருமா னுக் கினியவாக்கின், வற்கமலம் பொருணலங்கண் மல்குதிரு விர ட்டைமணி மாலையென்று. (க)

வெயின்மலையு மயின்மலையு மிருள்செறியென் மனமலையு மே யான்வென்றி, யயின்மலையும் படியெடுத்த வண்ணறிரு வடிக்கினி மை யமைந்தசந்த, வியனுறுபாச் சிலேடைவெண்பா வென்றுசீ காழிதவ மியற்றவந்த, வயநிலவு பாலறு வாயருக்குச் சிலேடை வெண்பா மாலையென்று. (உ)

செற்றடங்கா வுறங்கமயி னடம்பயிலுந் தில்லைநகர்ச் செம் பொன்மன்றிற், பற்றடங்கா வருணடஞ்செய் பெருமாற்குச் சி லேடைவெண்பாப் பனுவலென்று, சொற்றிடங்கண் டறிஞர்களி தூங்குதிரு வருட்பாக்க ளைந்தவாரூர்ப். புற்றிடங்கொண் டமர் பரமற் கினியதிரி பந்தாதிப் புனைபாவென்று. (ங)

பொன்னகரும் பன்னகர்கள் புன்னகரு மெந்நகரும் பொலி யுந்தன்னிற், புன்னகராம் படியோங்கும் பொருவில்வளத் திரும துரா புரியின்மேய, மன்னவனு மங்கையற்கண் மணவாளன் றிருவ டிக்கு வளர்சொல்லாதித், தொன்னலங்கண் முன்னிலங்கு தூயமக வந்தாதித் தொடைமற்றென்று. (ச)

இத்தகைய சத்தப்ர பந்தமும்வா னவர்புலவ ரென்னுநாமந், தத்தமிலுற் றமைநோக்கி யொருவாறிக் கவிநலங்க டம்மைநோக் கிக், கத்துகடற் காராடைக் காசினியிற் றரியாராய்க் கண்டுஞ்சா ராய்ப், புத்தமிர்திற் சுவையபத மிசையாராய்ப் புதரொன்னப் புகல நிற்ப, (ரு)

மண்டருயா மறைக்கிழவன் மனைக்கிழத்தி யாயகலை மடந்தை நோக்கி,யெண்டருநா விலளாகி யுடல்விளர்ப்பச் சேடனெனு மேந் தனேக்கி, மண்டியதன் கட்புலனுஞ் செவிப்புலனு விக்கவியை வாய்த்தபூமி, யொண்டொடியைத் தன்றலைமீ மிசைச்சுமப்பச் சற் பனையோடுளைத்தான்மன்னே. (சா)

ஈண்டுரைத்த வாண்டகைமற் றியாண்டயனைக் குலத்தவப் பே றியாவனென்னிற், ருண்டுதிரைக் கடலாடைத் தாரணிமா னனம்போற் றயங்காநின்ற, பாண்டிநன்னாட் டிடைத்திலகத் தில குநலன் மலிகாரைப் பதியானன்பு, பூண்டதன வணிகர்குலத் திரா மநா தன்றவத்திற் போந்த தோன்றல். (எ)

தானேதன் குலத்தினராய்ச் சென்றூர்க்குஞ் சார்வார்க்குந் தவமாய்நின்றோன், வானேயும் பெருஞ்சீர்த்தி வன்றொண்டக் குர வனருள் வாரிமாந்தித், தேனேயு நிறைகேள்விச் சூற்கொண்டு ம டக்கோடை சிதயக்கற்றோ, ரானமயி லினங்களிப்ப வரியதமிழ்க் கவிமழைபெய் தருமாவர்த்தம். (அ)

சங்கநிதி பதுமநிதி யிரண்டுமென வப்பமுனி சாற்றும்வேதப், பொங்குபொரு ளாய்நின்றோ னொழுக்கமுயி ரினுஞ்சிறந்த பொரு ளாக்கொண்டோன், கங்கைமுடிக் கணிந்தபர னருச்சனையிற் பிரி யாத கருத்தன்சைவத், துங்கமதத் தினராவி சொக்கலிங்கப் பெ யர்புனைந்த தூயன்மாதோ. (சு)

சிறப்புப்பாயிரம்

முற்றிற்று.

சிவமயம்.

## மதுரைச்சித்திவிநாயகர்

# திருவிரட்டைமணிமாலை.

பூமலிசீர் மாமதுரைப் பொற்பதுமத் தற்புதநீர்த்
தேமலிவா விப்பிரதீ சித்தடம்வாழ்—நாமம்
வருசித்தி யாம்பல் வதனத்தான் றாளே
யுருசித்தி யாம்பரவு வோம். (க)

ஓங்காரத்துட்பொருள்சம்மாரணத்துழலும்பரொன்றுந்
தாங்காரத்தும்பிமுகன்கூடற்சித்தித்தனிமுதலென்
றுங்காரத்துன்பறுத்தேநாமுணர்ந்துய்தற்காகவன்றே
பாங்காரத்துன்னிருதாரகமாவிற்பவித்தனனே. (உ)

பவியமுற நெஞ்சிறுகப் பற்றுதியேன் மீண்டிற்
பவியமென வோர்ந்துமது டண்ணாய்—திவியரென்று
நத்திக் களித்திறைஞ்சி நாடலுறுங் கூடனகர்ச்
சித்திக் களிற்றிருதாள் சேர்ந்து. (௩)

சேர்ந்தைம்பொறிநெறியோவாதுழன்றழிசெய்கைமுற்றுந்
தீர்ந்தன்பினர்மனத்தண்ணளிசூழ்ந்துதிருவருட்டே
னூர்ந்தின்புறுநின்பதாம்புயத்தென்னெஞ்சதாயவண்டர்
சார்ந்தின்புறுவதுண்டோசித்திவேழத்தனிமுதலே. (௪)

தனியாக நீயுந் தமியேனுங் கூடி
யினியோ ருவமனிலா வின்பந்—தனின்மூழ்கு
மத்து விதக்கலவி யாமா றருட்கூடற்
சித்தி விநாயகனே செய். (௫)

செய்வினையாவுநின்சேவடித்தொண்டினுஞ்சித்தத்தென்று
மெய்வதுன்வாய்மைச்சொரூபத்தியானத்துமென்னுரைநின்

றெய்விகமான்மியமேபொதிபாவினுஞ்செல்லும்வண்ண
மெய்வழிகாட்டியருள்கூடற்சித்திவிநாயகனே. (சு)

விநாயகனே யெவ்வுயிர்க்கு மேவருட்பா லூட்டு
மநாயகனோர்ந் தாங்களிக்கு மைய—வெநாயகனோர்
சிந்தைக் கருள்கூடற் சித்திக் கயானனத்தாய்
சிந்தைக் கருள்கூடச் செய். (எ)

செந்திருமார்பனயன்முதற்பல்வகைச்சிவருஞ்செய்
புந்தியுளாயவன்றெல்லைப்படாதன்புரிதொழிலென்
றந்தமெய்ந்நூலுணாவாய்மையைக்கொம்பிறுத்தாங்குணர்த்து
மெந்தையைக்கூடலிற்சித்திக்களிற்றினையேத்துவமே. (அ)

ஏதப் பவக்கடலாழ்ந் தெய்ப்பதும்யாஞ் சேவடிக்கீழ்
மோதத் தனிக்கடலின் மூழ்குவதுஞ்—சீதவன
சத்திக் களிக்குமணி தாமவிநே ராமதுரைச்
சித்திக் களிற்றின் செயல். (கூ)

செயலாவதொன்றறியேன்சிறியேனின்றிருவடித்தொண்
டயலாவந்தோசெய்வினைநீசருள்ளினுமஞ்சுகிற்பா
ருயலாவதெங்கினித்தம்பமுன்றுளன்றியுண்டுகொலென்
மயலாசரித்தருடந்தாள்வையோசித்திமஃதங்கமே. (க0)

மாதங்க மாமுகனை வல்லபா நாதனையெ
மாதங்கந் தீர்த்தருளு மண்ணலைநெஞ்—சேதங்கச்
சித்திக்க ணேசனையத் தென்கூட லானையன்பர்
பத்திக்க ணேசனையே பார். (கக)

பாரம்பனலானிலமம்பரமிந்துபானுவுயிர்
வாரம்பயிலட்டமங்களமூர்த்தியன்வாய்ந்தசித்தி
யேரம்பன்மூடிகவூர்தியைங்கையனிறுத்தகொம்பாம்
போரம்பன்கூடவிற்பொற்றுமனாக்கணப்பூரணனே. (கஉ)

பூரணனைப் பாப்புருவம் போக்கித் திதித்தொழிலி
னாரணனை வைத்தருளு நாயகனை—வாரணமா
வத்திரனைச் சித்தி வரதனைவண் கூடலரன்
புத்திரனை யென்மனமே போற்று. (கங)

பாற்றுகவாழியென்றேன்பலகாலிதம்புந்தியொன்று
மற்றுகவாதுதன்னேவலிற்சாரொளிதெண்ணிற்றெல்லா
ாற்றலுஞ்சார்பின்மையுங்கொள்ளுநீவந்தறையிலெந்தாய்
ாற்றுகணீத்துன்வழிநிற்குமே சித்திமாமுகனே. (கச)

மாதேநிற் கியாதேமான் மாபூதந் தேவிரவு
மீதேயாஞ் சித்திக்க ணேசனுரு—நீதேடிக்
கூடலுறிற் சிறுங்கா கோதரஞ்சூழ்ந் தேகியவற்
கூடலுறி னுங்கீறுங் கோடு. (கரு)

காட்டிருபான்சதமாவூர்ந்து வெள்ளியங்குன்றினென்றும்
ாட்டிகழாவரணந்தொறுலாவருமானெழில்கூர்
சுட்டிளங்கோலமிக்கூட்டினின்றியானகல்செவ்வியிற்கண்
ாட்டியென்னுர்த்தியைத்தீர்த்தருளாய்சித்திக்கண்ணுதலே. (கசு)

கணக்காயர் பாடமொன்றே கற்பிப்பான் வேட்டாங்
கிணைத்தாடாழ்ந் தோதுநம்பிக் கெல்லாம்—புணர்த்தாண்ட
சித்திக் கயமுகபத் தில்லொன்றி தற்கெனினு
நத்திக் கழறுதற்கார் நான். (கஎ)

ானெனதென்பதற்றார்க்கருள்சித்திவிநாயகநீ
ானுறுதாசகமூவகைத்தென்றுகொல்சத்துணர்வின்
யனமமெய்பதிபாசிவெம்பாசமெய்யென்றுணர்த்து
ானுளங்கொண்டுகொன்மூவியற்றோர்வடிவங்கொண்டதே. (கஅ)

வல்லபாவாமம் மகிழ்ந்திருபாற் சித்திபுத்தி
மெல்லியலார் சித்தி விநாயகன்றான்— புல்லவமர்
கின்றதிச்சா ஞானக் கிரியாமுச் சத்தியிவ
ரொன்றுணர்த்தற்கன்றியென்னென்பேம். (ககூ)

ண்ணிகராம்பதகன்யானெனக்குன்னிணையடிக்கீழ்
ண்ணுமெய்வாழ்வும்பிறவுமெட்டாவென்மனமழிந்த
ுண்ணெறிப்புக்குழலாமையொன்றேனும்புரிந்தருள்வாய்
ோன்மதிற்கூடலிற்சித்திவிநாயகபூரணனே. (உ௰)

சித்திவிநாயகர்
திருவிரட்டைமணிமாலை
முற்றிற்று.

உ

சிவமயம்.

# மயின்மலைச்சந்தவிருத்தம்.

## காப்பு.

பூமேவு மாயூர பூதரத்தான் சேவடிக்கெ
ழுமேவு சந்தப்பா நன்மாலை—யாமேவு
மோகையடி யேற்குதவ வுள்கினே னும்பன்முகத்
தோகையடி யானையுளத் துள்.

## நூல்.

தானத்தானனதானனதானன
தானத்தானனதானனதானன
தானத்தானனதானன தானன தனதானா.

மானைப்போலியநீள்விழிமாதர்க ளோநட்பாயெனதாவியினோடுடல்
வாழ்விப்போரொழியாநலமீவர்க ளெனுமாசா
மாயப்பேயரசாளவெனாறி வோடிச்செய்மையதாகவனார்கடை
வாசற்கேயுலையாவவரேவல்செய் தொருவாதே
யூனொட்டாதகளேவரநாய்கறி யாமிக்காய்மகிழ்பான்மையின்வீழித
ழூறற்பாழமுதேயுணுமாசைகொ டுலைவேனே
லோதற்காருமொனுவரமேதகு கோடிப்பானுவுநானூறுநான்மறை
யோலிட்டோய்பதநீழலின்வாழ்வெவ னுறுவேனோ
வானத்தாரிறைதேவர்கனாயகன் வேடர்க்கோரரசாமிவர்பால்வரு
மாதர்ச்சேயிழையாரிருபாலுற மயின்மீதே
மானுற்றுதரமேகொளுமாறெளி தான்மக்கோடியின்மாமலம்வியவு
மாறற்றேயொளிர்பேரருடோயவும் வருவோனே
வானத்தூடெழுதூமதிபாசிலை வாசக்கூவிளமாசுணநீள்பிர
வாகப்பேர்நதியாதியளாவிய முடியோனோர்
வாமத்தாருமிமாசலநாயகி யோகைச்சாகரமூழ்குறவாடல்செய்
வாகைக்கேகயமாமலைமேவிய முருகோனே. (௧)

## வேறு.

தனனாதனதத்ததனத்தனனா
தனனாதனதத்ததனத்தனனா
தனனாதனதத்ததனத்தனனா தனதானா.

எழின்மாமுலைமுத்தநகைச்சியரார் தனமீதுபடத்தை
யொதுக்கியுளே யிளையார்கண்மனத்தை
வசித்திடுவா ருறவார்போ
லெமைநீவிர்விடுத்திடலற்பமுமா தரியாதுயிர்தப்புத
னிச்சயமே யெனவேபலபொக்கமுனாத்
திடுவார் மயலாலே
யொழியாதநலத்ததெனப்பெரியோர் முதுநூலினிடைச்
சொலுமெய்த்தகையா மொருவீடெனுமுத்தி
யிவர்ப்பெறலே யெனவாளா
வுலைவேனுனபத்மவிணைப்பதமேன் மனமாசைகொ
ளற்புமிகுத்திடுவா னொருவாதவரத்தை
யளித்திடோ னுளதாமோ
வுழையான்மதுரைப்பதியுற்றிடுவோன் மறையோன்
மனைகைக்குதலைக்குழவோ டெநீர்நசையுற்ற
தெனக்கொணர்வா னுறமீதே
யுயராலவிருக்கமரப்பதனுன் மனைபாலுயிரற்றிட
வப்பொழுதே யுழைவேடுவனிற்பவனைக்
கொடுபோய் முறையேயோ
வழியாதசிறப்பமருத்தமனே யெனவோதியசொற்
செவியுட்புகவு மனுகாவிளைவய்த்துணர்
தற்கிலையே யறிவாவா
வரனேகருமைக்கடுவைத்தகளா வெனுமாறனயிர்ப்பை
யவித்திடுவா னவனுதாமுற்றமயிற்பொறை
வாழ் முருகோனே. (உ)

## வேறு.

தந்தத்தானனதனதானதனதானதன
தந்தத்தானனதனதானதனதானதன
தந்தத்தானனதனதானதனதானதன தனதானா.

ஈஞ்சிற்றேய்வாள்விழியையாருவிமீதொழுகு குன்றைப்போ

லாகுமெனவாரமணிவார்முலையி னண்புற்ருராடவர்க
ளாவிகவர்பாரவலை யெனவீசா
நந்தச்சேர்வா ரவளைநீவிர்வரவேதுதவ முன்புற்றேம்வாசமலர்
போலவகலாமலமர் நங்கட்காரீடெனமுன்
மாயமொழிபேசுமவர் மயலாலே
யஞ்சப்பான்வாளிபடவேயுருகியீடழிதல் பொன்றப்போயாசி
லடியார்களவைசேரவுமெ னங்கைப்பூவோடுன்
வழிபாடுசெயுமாறுமருள் புரிவாயோ
வஞ்சத்தோன்மாவிருவர்பாதமுடிநேடரிய தும்பைத்தாரா
ரிதழிசூடுமெரனார்சுதமு னைங்கைத்தூயோனிளைய
சோதரநலாரிருவர் மணவாளா
செஞ்சொற்பாமாலையினமேவியபுயாசல முன்வம்பிற்
சூழாருகதமாகிரிபுபாழமணர் சிங்கக்கூரா
யகழுமீதிடுகினுமமன மயராதே
சிந்திப்போர்பேரிடர்களாடெரியிலேயணுகு பஞ்சைப்
போலாகமலமாவலிகெடாவுண்மயல் சிந்தத்தேரு்
மருவிடாதகதிசேரவருள் செயும்வேளே
வஞ்சச்சூரோடரியினை னுநீடுகிர வுஞ்சப்பேரார்தரணி
தாரகன்முனுமசுரர் மங்கக்கூர்வேல்கடவியாவி
தொலையாவளியொ டொழியாதே
வந்திப்போராயசுரர்பேரனரின்மேவுசிறை விண்டிட்டேதாரு
நிழல்வாழ்வுபெறவேயருளு மைந்துற்றோய்வீறுமயின்
மாமலையின்மேவியருண் முருகோனே. (௩)

வேறு.

தனன்தனனதன
தனனதனனதன
தனனதனனதன தனதானு

ககனமுகடளவும் வடிவொடதிவிளைசெல்
கதியமகிடமுது கினிலேகாக்
கரியநிறமுமதி துணிசெயெயிறுமிரு
கரனிலயில்தைைதயு மெதிர்காணு

வகமுமுட்டுநெக வதிகபயமுனுற
வலேசெய்துயிர்கவரு நமன்மீளா
வவதிபலபுரியு மதரிலெனேயணுகி
யபயமெனவலிய ரெவர்கூருய்
மகமொடரியதவ நனிசெய்தரிதுபெறு
மகவின்முடிவையுனி யிருவோர்தா
மனனிலுறுதளர்வை வினவியவியுயிர்கண்
மதியமுறுசடைகொள் பதிமேவாத்
தகையசிவகுறியை நிறுவியிறுகிடவு
ட்ழுவவழிபடுமெய் முனிவோனேர்
தரமுனணியழிவி னிலேமையினேயருளி
தனேயமயின்மலேயின் முருகோனே. (ச)

வேறு.

தந்தாதனத்தனதானனதானன
தந்தாதனத்தனதானன தானன
தந்தாதனத்தனதானனதானன தனதான

விந்தாசலத்திணேபோன்முலேவாரியு ணுங்காரறற்
களவார்பொழிலேவையும் வென்றேறுமைக்குழ
ஞரியர்வாழ்மனே யிடையேகா
விண்டாவியற்றுடல்வீடுமுனீரரு டந்தாலுமக்கறனுமென
மான்மனம் வெந்தாருமட்டியினுனென
வோதிட வொழியாமே
யந்தாமறைக்கொடியேகுயிலேயெழி னந்தாமலுற்ற
சுகாலேயமேயென வந்தோவுனாத்தொரு
நாளுமமுதவர் பணிபேண
வம்பாவிகைக்கடையூறமுதார்தரு சண்டாளர்நட்பிலுழ
துனதாளிணே யம்போருகத்தடியேன்
மனநாடிட வருள்வாயோ
வந்தாமனற்புவிமாகமுமானவ பண்டேயெனக்
குடியேறிடவானவர் மைந்தாரரக்கர்க
ளாருயிர்காதிய வடிவேலா
வந்தாருமற்பொமொமலர்தூவிமு னெந்தாயெமக்கருளா

யெனவோவிட மங்காதளித்தொரு
வீடெளிதாயருள் பரமேசா
கந்தாகுறப்பிடிமேயபுயாசல விண்டாருவுக்கிறை
யோன்மகளாருளு கந்தாதரக்கடன்
மூழ்குறவேவரு மணவாளா
கங்காதரற்குளாயாமொழியோதுக டம்பாமலைக்கொடி
யாமுமையாடரு கன்றேமயிற்பெயரோதிம
மேவிய முருகோனே. (எ)

வேறு

தனத்தா தனனதன
தனத்தாதனனதன
தனத்தாதனவதன தனதான

தொகுத்தேயெனையிடரி லழுத்தாவுயிருநனி
தொலைப்போனெனவிவனை யுணராதே
சுகிப்பானுரியநல னளிப்போனெனவுமென
துணைப்பானமையனெனவு மயல்கூரா
மிகக்காதலையுதவு மனைக்காதலிமகவு
வினைக்கேவிடுமுறவ ரிவர்பாலார்
விருப்போடிலைவுபெற லொளித்தாரருள்பதிய
விளைத்தாமரையடிக ளருள்வாயோ
சகத்தோடெவருமனம் வெருக்கோளுறுமரிய
தவத்தாலளவில்வர முடையோனோர்
தனக்கேனையாரிய விறற்சூரினையருறு
சலத்தோரொவருயிரு மொழியாதே
செகுத்தேரமரர்சிறை விடுத்தேயவருலகு
திறத்தோடுரிமைபெற வருள்வோனே
சிவத்தோடமரமலை யருட்டாயுதவுசுத
சிகிப்பேர்மலையிலுறை முருகோனே. (அ)

வேறு.

தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன தனதான

அளப்பரும்பலபிறவியின்முயல்வுறு தவப்பயன்பரசிவ
னருளுடலினை யடுத்ததன்றியுமுயிர்விடு
மவதியு மறியோமா
லதற்குமுன்பரனடியிணைபெறும்வகை யுரைத்ததந்திரமுறை
சபரியைசெய்து ளடக்கியைம்புலவலிதெற
வினிதென வுணராதேன்
பிளக்குமிங்தெனுமெயிறுடையமபடர் மிகச்சினந்தென
துயிர்தெருமரநனி பெலத்ததுன்புசெய்தடி
பிடியுதையென வொருவாதே
பெருத்தவஞ்சகனெயிறுகவுடையென வுறுக்கிவம்புசெய்
பொழுதுனதிணையடி பிடித்திருந்தளியொடு
பலதுதிசெய வருள்வாயோ
வளைத்துவெஞ்சமர்வினைசெய்துவரகுண னடத்திவந்த
குதிரையடியுறுதலின் வழித்துயின்றசொன்
மறையவனுயிரற முதுநூலோர்
வகுத்தறைந்தபலறவினைபுரியவு முதட்டைமென்
றுடல்பழிதெறுதுயரினை மதித்தயர்ந்திட
விடைமருதிடைவரு கெனவோதா
விளைத்ததுன்பறவருளியுமெவர்களு முரைப்பரும்புகழ்
மதுரையிலவனுள விருப்பினன்சிவபுரி
தரிசனமுற வருள்வோனால்
விதிக்கொள்பஞ்சவனெனமுனமுலகினை யளித்த
சுந்தரவரசருள்குருபர விரைக்கடம்பணி
புயபிணிமுகநக முருகோனே. (எ)

வேறு.

தய்யத்தானனதந்தனதானன
தய்யத்தானன தந்தனதானன
தய்யத்தானனதந்தனதானன தனதானா

வையத்தாருயிருண்டிடுவானெனி தெய்திட்டானுருவந்தகனுமென
மையுற்றேர்கொளுமம்பகராயிழை மடமாதர் [டன்
மையற்பார்வையெனுங்கயிறூனுயிர் நைவுற்றேவெனவும்பிணியாவு
வெளவிப்பாழினிதம்பமுனீரினு ளுறுமாறே

செய்யற்பாலனவொன்றுணராதற மெல்கப்பாடுபுரிந்தனராவுன
செல்வச்சோதரர்வென்றிகொள்வாகுமு னவர்மாயாச்
செல்லற்சேர்படையின்றிறனுலவ னள்ளற்சாகரமுங்கிடவேவிய
தெய்வக்கூரயிலின்றிவணேவிய நினைவாயோ                [மு
வையற்கோலமெனும்பெருமாலய னுள்ளிட்டார்களுலைந்திரிவானெ
மவ்வெப்பாம்விடமுண்ககிலானெனின் முதுவானோ
ரவ்வப்பேரொடுமென்றழிவாரிது கைவுற்றுமலகந்தனிலேவரு
மையத்தாழுதல்பொன்றிடவோர்வர்க ளதனாலே               [வது
சையத்தாய்மகிழ்சங்கரன்வானதி பிள்ளைப்பான்மதிகொன்றைமுனு
தைவுற்றூர்சடையெந்தைபிரானென வறியாதே
சைவப்பேர்நெறிநின்றிலர்பாதக ருய்தற்காரவர்பைம்புனமீதொரு
தையற்காதரம்விஞ்சுசிகாவள வளைவாழ்வே.               (௭)

வேறு.

தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன    தனதான

வலத்தினெடுமுயிர்த்தொகையை முருக்கவருமறக்கடவுள்
வருத்தியெனதுடற்கிறுதி செயமேவா
மலைக்கவொருகரத்திலுறு கயிற்றினுயிர்பிணித்தரிய
மறைப்பனுவலுரைத்தமுறை கொடுபோகா
வலைத்துநனிவினைக்குரிய வளர்க்கடலிலமிழ்த்திடுமு
னருட்பெருகவழிக்கொடொளிர் மயின்மீதே
யடுத்துநலமளித்திணையின் மலர்ப்பதுமவிணைப்பதமு
ளருத்தியொடுதுதிக்கவர மருள்வாயோ
மலைக்கொடிதனிடத்திலக விருத்துபரசிவத்தருவின்
மதிப்பரியநுதற்கண்மலர் தருதேனே
மனத்திலுனதருட்கழலை விருப்பினெடுநினைப்பவரை
மலக்குழியினெடுத்துரிமை யருள்வோனே
மலர்ப்பொழில்களொழுக்குமது வழிக்கொடலைகடற்புகுதும்
வளத்ததியெனப்பொலிவு பெறவேகா
வயற்புகநென்மிகக்ககன முகட்டளவுமடுத்துவிளை
மயிற்கிரியின்மிசைத்திகழு முருகோனே.               (௮)

## வேறு.

தனனதனதானதந்த
தனனதனதானதந்த
தனனதனதானதந்த தனதானு

கலையைநிகராயகஞ்சுகண் மரையின்மூகைவீறுகொங்கை
கரியமுகிலேநெருங்கு குழன்மானர்
கலவிமயலேதுவன்றி யுனையணுகுமேதுவென்ப
கனவினிடையேனுமொன்று நினையாதே
யலையுவரிசேர்துரும்பின் மனமலையவோய்வதின்றி
யருநரகிலேயமிழ்ந்தி யலையாமே
யடியனுனையேநினைந்து நிரதிசயமாயவின்ப
மடையவெளியாகவென்று வருவாயோ
மலர்துறுமிநீடுபொங்க ரமரர்தருவோடுசென்று
வளரவளிபாடுகின்ற தெனவானோர்
மனமருளமீதிருந்த கிளைகணுமர்நோயருந்த
வலியசிறையேயிடுந்தொல் பகையானோர்
வலிதொலையநீரிடும்பை தனையகலவேல்விடுங்கை
வரதர்குமரேசர்குன்றை யுறுகாவே
மருவியிவண்மேயதென்று புகல்பரிசினோவிடுந்தென்
மயிலின்மலைவாழவந்த முருகோனே, (௧0)

## வேறு.

தந்ததனதானதந்த
தந்ததனதானதந்த
தந்ததனதானதந்த தனதானு.

துன்றுமுலைமூரல்கொங்கை குன்றுவிழிகூருமம்பு
தொண்டையிதழ்நேருமஞ்சு குழனேர்வார்
சொந்தமெனவோடிமுன்பு நின்றுநினைவாகுகின்ற
தொண்டெவைகளோசொலுங்க ளயரா தே
நன்றுபுரிவேனுமின்ப மொன்றையருள்வீர்களென்று
நங்கையர்களாசைவிஞ்ச மயல்கூரா
நைந்துலைவுறாமலென்று நின்சரிதையேபுகன்று
நன்குகதிசேரவந்து னருடாராய்

வென்றிமயிலேறுகின்ற பங்கயமுஞகநின்று
    விண்டுதுதிபேசுமன்பை யுடையோர்பால்
வெந்தறுகணேடுமெந்த கன்கயிறைவீசுதுன்பு
    வெங்கொடுமைவாதவன்பி னருள்வோனே
கொன்றைமுடியானிவந்த மன்றினடமாடல்கண்டு
    கொண்டுண்மகிழ்கூருமம்பை தருசேயே
கும்பமுனிபாதபங்க யம்பணியமேவுகந்த
    குன்றைநகர்வாழவந்த முருகோனே. (௧௧)

வேறு.

தந்ததந்தன
தந்ததந்தன
தந்ததந்தன தனதானு.

மைந்தர்பெண்டிர்க டம்புநன்குறு மங்கலந்தரு பவராமால்
    வஞ்சமொன்றில ரின்புறுந்துணை வந்தின்றெென மகிழ்வாயே
சந்ததம்பிர பஞ்சமெனறுமை சங்கடந்தனி லுலைவாமே (ஞே
    தண்டைகிண்கிணி கொண்டிலங்குப தங்களன்பொடு பணிவே
நந்தனஞ்சனு மன்புடன்பணி நன்குதந்திட வருள்வோனே
    நங்களின்றவ மென்கொலென்றிரு நங்கைபின்புறு மணவாளா
தந்ததந்தன தொந்தொமென்பர தந்திகழ்ந்திடு நடனிவோய்
    சந்தனந்திகழ் குன்றையம்பதி தங்கிநின்றிடு முருகோனே. ()

வேறு.

தானுனதனனதன
தானுனதனனதன
தானுனதனனதன தனதானு.

வாஞருமமுதின்மொழி கூறுவுண்மயல்செய்மட
    மாஞரையணையவரு சுகமீதே
மாலாகியவர்கண்மனை நாஞளுமலையும்வினை
    மாறாதுதுயருறுதன் முறையாமோ
வானேறுபரமபதி நீறாறுதிருநுதலி
    லாறுறுபுயனெனமுன் வருவோனே
யாதாரமகலவுலை யாதேயமெனநரகி
    லாழாதுனடியனுய வருடாராய்

கீரோருகுறவர்மகள்சூதாடுகருவிநிகர்
காண்மிறுகளபமுலை மலைமீதே
காமாதிகலைகளெழு தாமோகமொடுதழுவு
காமாரிசுதவடியர் பவநாசா
வானோகியமரரிறைகாணுமுனுளம்வெருவ
மாபாரவணியையணிபுயதீரா
வாதாமமமணர்கழு மீதேறுபணுவலருண்
மாயூரகிரியில்வரு முருகோனே. (௰௩)

## வேறு.

தனன தன தனன தன தந்தான தத்ததன
தனன தன தனன தன தந்தான தத்ததன
தனன தன தனன தன தந்தான தத்ததன தனதானா.

உறையிலிடுமயில்விழிகளம்போருகத்தைநிக ரணிமருவுமிணை
முலைகள்கொண்டேமருட்டுபவ ருறவின்மொழியினி
யனபுகன்றுடவர்க்குரிய பொருளோடே
யுயிருநனிகவர்பவர்மிகும்பாதகக்கொலைஞர் மலசலமுதிரமொ
மூகல்குன்றுவழுக்குடலை யொளியபலபொருள்கள்
கொடுநன்காமினுக்கியர்கண் மயலாலே
வறுமைபிணியொடுதினமுநொந்தேயுனக்கடிய னறவினைகள்பல
வகையிலொன்றேனுமற்றுரிய வலியொழியாசகிடை
விழுந்தேயிடர்ப்படுவ தழகாமோ
மலமொருவுநலனுதவுபண்பேயுனக்குரிய தெனவறிஞர்பகரு
மொழியின்றேனெனக்கிலைநல் வழியடியர்தொழ
வுரியநின்பாதபத்மவிணை யருள்வாயே
கறைமிடறனுதல்விழியன்வெங்கோபகட்செவியன் மழுவினொ
டுமிரலைபெறுகன்றேறுகைக்குரிசில் கனிபடியர்மல
வரவுகொன்றேயளிக்குமயி றருசேயே
கவிகள்பலபுலவர்தரவென்றூமெனத்திகழு மிணையில்புயவரிசை
யிடைகொண்டேயவர்க்குரிய கதியையுடனருள்புரியு
மெந்தாயடக்குனக மடவேதா

மறைமுதலையறிவிலினியெங்கேசிருட்டிசெயும் வகைமையென
விறையிலன்முனஞ்சாவுள்வெட்கமுற மலரயன்முடிக
ளசையவன்போடுகுட்டியருள் குருநாதா
வலவவுணருளம்வெருவலுண்டேநடுக்கமுற வளமணியி
னொலிகினெனவன்றூடலுற்றகுக மயின்மலையிலடியருய
வென்றேயிருக்குமருண் முருகோனே. (௧௪)

## வேறு.

தனத்தந்தானனதானனதானன
தனத்தந்தானனதானனதானன
தனத்தந்தானனதானனதானன தனதான.

வினைச்சண்டாளியர்கூடுறமேவினர் தமைக்கண்டேயினி
தாமொழிபேசுவர் விடுத்தெங்கேனுமுறுவகை
மாயைசெய் விறல்சேர்வார்
விளைப்பைம்பூணணிவார்முலைமீதுறு நகைக்கொண்டே
யுலைவாய்மெழுகாயுளம் விழுப்பஞ்சார்நெறி
சேரகிலாதுறன் முறையேயோ
கனற்குன்றுவகைவேள்விசெய்தாதையு யிளைக்கொன்
றுய்தனையேபுணர்மாபத கனுக்குன்றுதைமு
னுரருவேன ரவர்சேய்நீ
கலக்குண்டேயிடரோடிடநீயடி யனுக்குன்றாளிணையே
னருளாவகை கடற்குன்றேவிடமா
வடிவேல்விடு முரவோனே
சினக்குஞ்சூரன்முனுதியதீயர்க டமைக்கொன்றே
சுரர்பேரனூர்போம்வகை திளைக்கங்காநதி
பாலகனுமென வருவோனே
சிவக்கன்றேகுழகாவெழின்மீறிய வருட்கந்தாகுகனே
குமராமிகு திருப்பொன்றூரணிநாரிய
ராசையி லவர்வாழ்வே
வனப்பெண்பாலருள்வேடமொடேயவ ளிடத்தின்பே
கொளுபாயமதோதியு மறுக்கின்றுளென
வானைமுனே வரநினைவோனே

வயச்சிங்கேறுகளோகையொடுறிய மதத்தந்தாவளமோ
டுறவேகொளு மயிற்குன்றுலயமாகிட
மேவிய முருகோனே. (௫௫)

வேறு.

தனனாதனதன
தனனாதனதன
தனனாதனதன தனதானா.

பிளவார்மதிநுதல் களவேகுழலிரு
பிணையாம்வரிவிழி யிடைநூலே
பிடிசேர்நடையினர் கடமாமிணைமுலை
பெரிதாகியசுக மிவரீவார்
தளவார்நகையின னெனவேமயல்கொடு
தவிராதுழல்வது முறையாமோ
சதமேயெனநின தருளார்கழல்பணி
தகைசால்குணமதை யருள்வாயோ
குளமார்விழியினர் மலரோனறிவிலி
குறையாவுணர்வுடை யுரவோனீ
குகனேகுடிலையி னுரையாதெனவவர்
கொளவேமுனமருள் குருநாதா
வளமேகுலவு சரியையாதியநெறி
மருவாமலவலி தெறுவோராய்
மறையாகமவிதி வழுவாதவர்தொழு
மயின்மாமலைவரு முருகோனே. (௫௬)

நினையாவருமைமி வுடலோகனவென
நிலையாதழியுமி துளபோதே
நினையானறவுணர் தருமாறருள்புரி
நிகிலாகமகலை படியாதே
யினையாமகிழ்தரு மனைவாழ்வெனமய
லிடைமூழ்குலைவுறன் முறையாமோ
விதுவோநினதரு ளிறைநீயடியவ
னெவரோடுரைசெய்து குறைதீர்வே

னனமீதயனொடு வனமீதரிமுடி
யடிநேடியுமுன முணராதோ
னலர்கூவிளமது வொழுகாரிதழிமு
னளவாமலரொடு மளியோடோ
தினநாவொடுதின மடிபேணடியவர்
திகையாதெளிதரு டருமானார்
சிவனேடுலகரு ளிமயாசலைதரு
சிகிபூதரமமர் முருகோனே. (௰௭)

வேறு.

தன்ன தன தான தந்த
தன்ன தன தான தந்த
தன்ன தன தான தந்த தனதான.

வன்னமுலையாகுமுங்கள் பன்னிரைகள்வீறுகின்ற
வன்னிகருமேவுகொங்கை மடமானீர்
மன்மதனைவாளிகொண்டு பின்னமுறவேவநின்ற
வன்மைமுடிவாகவந்து மருடாரீ
ரொன்னையினியோதுகின்ற துன்னுமுனநீவிர்கொண்ட
வெண்ணவழியாயதொண்டு புரிவேனா
லின்னிலைமைவாய்மையென்று பன்னியொழியாதுலைந்த
வென்னையினியாளவிங்கு வருவாயோ
நன்னர்மழுவேறுசெங்கை யன்னலருள்காதன்மைந்த
னம்மிறையெனுவுளங்கொ டகவோர்பா
னண்ணிவிழைவோடுநெஞ்சின் முன்னியவையாவுமங்க
ணன்மையொடுசேரவின்ப மருள்வோனே
வைந்துதியவாளைவென்ற கண்ணிருவர்பான்மகிழ்ந்து
வண்மையுறவேபொருந்து மணவாளா
மன்னுமறையோரிடங்கொள் வன்னிமறைபேசிடுந்தென்
மஞ்ஞைமலைமீதிருந்த முருகோனே. (௰௮)

வேறு.

தானதனதத்ததந்த
தானதனதத்ததந்த
தானதனதத்ததந்த தனதானா.

காரணவிநெய்த்திருண்ட மாமுகிலைமட்டகன்ற
காமுகர்மனத்தைவென்ற குழன்மானார்

காதறுமற்பவின்பை யோதுவர்மிகுத்ததுன்ப
காரணமெனத்தெளிந்த முதுநூலோர்
பாரிடையுதித்துழன்ற தோருதலொழித்துமுன்சொல்
பாதகவினைக்கொடுங்கி யழிநாயேன்
பாவலர்வழுத்துகின்ற நாதமுடிவைக்கடந்த
பாதவனசத்திலன்பு பெறுவேனோ
நாரமலருற்றவங்கை யோடயனுமைச்செறிந்த
நாரணனுமுக்கணெந்தை யெனவோதா
நான்மறைகண்மிக்குயர்ந்த வாகமநெறிக்கணின்று
நாடுபரமற்குகந்த சுததீரா
சூரனொடுமுற்றதம்பி மார்கள்வலியற்றலைந்து
சோகமுறவெற்றிகொண்ட திறலோனே
தோமகலுமற்புளங்கொண் மேதகையபத்தர்துன்று
தோகைமயில்வெற்பினின்ற முருகோனே. (௰௬)

வேறு.

தனனதனதானதன
தனனதனதானதன
தனனதனதானதன தனதானா.

கதிதருவராயிழைய ரெனவவர்பினோடியுறு
கலவிவிரகேமுதிரு மயலாலே
கலவமயிலேயினிய மொழியகுயிலேயெமர்செய்
கரையிறவமேயெனவும் வெகுவாயே
துதிகள்பல்பேசியும திணைமுலைகளோடதர
சுவையமுதமீதிரென வுலைவோடே.
துயரமுறுகாமவினை யொருவியருளாகுமுன
துணையடியிலாசையினை யருள்வாயோ
சதிமுறைவழாமலொரு பதநிலையிலேமசபை
தனின்மருவிமாலோடயன் முதல்வானோர்
தமதுரியசீர்நிலைய வரவுபுலியோமெகிழ்
தரவுயிர்கள்வாழ்வுபெற நடமார்வோன்
மதியிதழியாரறுகு முடியின்மிசையேயணியு
மறைமுதல்வனையபர னிடமேவா

மகிழ்மயமாதுதவு மிளையசுதகேகயசி
 மயமதனின்மேவியருண் முருகோனே. (உ௭)

வேறு.

தானந்தனதன
தானந்தனதன
தானந்தனதன தனதானா.

தேனீர்ஞ்சுவையமு தூரும்பனிமொழி
 சேன்மான்கணைவிழியவர்மாலே
தீதாங்கடுவென மேலோங்கிடவறி
 தேமாண்டறிவழி புலைநாயே
ஞானன்பரமெனு மூடாந்தகரிழி
 நாவீர்ந்திறைபர சிவமேயா
நாமாம்பசுவெனு மாசான்றவர்பெறு
 காதாம்புயபத முறுவேனோ
மீனும்பகியிரு நானன்கரமன
 வேகாஞ்சியிலரு ளியமாதா
வேயாம்புயையுமை யாள்சாம்பவியுமா
 வேதாந்தமுமின முணராதாண்
மானேந்தியகர னேடாங்கவையிடை
 வானேங்குறநட மிடுதாளாண்
மாழாந்திடுமெதி யோர்காண்பருமயில்
 வாழ்வாஞ்சிகிமலை முருகோனே. (உக)

வேறு.

தனதனதனதன
தனதனதனதன
தனதனதனதன தனதானா.

இனைவுறுவினைவழி புகவிடுமனமக
 வினமிவரிடர்தபு நலமீவா
ரிவரலதொருதுணை யிலையெனவனுதின
 மிடுபணிசிரமிசை கொளுநாயே
னினதிணையடிதினை யளவுறுபொழுதினு
 நினைகிலனறிவிலி யுயுமாறோர்
நிலையருள்செயினல தெவர்களுமுணர்வரு
 நிறைமலரடியிணை பெறுவேனோ

வனமுலையளவிய புழுகணிபயிரவி
மகிதலமஙவமுழு தருண் மாதா
மலினமதறுபவ வினைதபவடியவர்
மகிழ்வுறவுதவிடு திரிசூலி
பனிமலைதருசுதை பகவதியுமையவள்
பரைசிவைதிரிபுரை மகமாயீ
படிதொழவுதவிய சரவணபவகுக
பளகறுமயின்மலை முருகோனே. (௨௨)

வேறு

தனனதன்தானதந்த
தனனதனதானதந்த
தனனதனதானதந்த தன்தான.

பரமுயிர்களேபவஞ்ச நிகருமயன்மேவுகொம்பு
பதிதலையவாமையின்கண் மயிரோடே
பரவுககனரவிந்த மெனவுநிலையாயதொன்று
பரபிரமமாகுமென்று மதநாமே
பிரமமுடல்யாவுநின்ற நிலைமைகடகாயம்விண்டு
பிரியினியல்பாகுமென்று மதுலீலா
பிரியவினையாகுமுந்து பிரமநமலாதிலென்று
பெருகவுரையாடுவெம்ப ரினமேவா
தரியகலையாகமங்கண் மறையின்முடியாவுநன்கி
னலசியுணராமுனஞ்சொல் பரமேவா
லறிவையுளதாவிகுன்று மலினவறிவோடுநின்ற
தவனிசடமாம்விரிந்த கடனீர்சேர்
தருமுவர்செய்ஞ்ஞாயிறங்க ணிருளுவமையாவுளங்கொ
டகையினிவணுதினின்ற தெனவோர்வார்
சகசமலவாதைவிண்ட பெரியரினமேவுமன்பு
தவியருளுவாய்சிகண்டி மலைவாழ்வே. (௨௩)

முகிலையறவேமுனிந்த கரியநறையோதியிந்து
முகம்விறுதலேவுகண்க ளிடைநூலார்

மொழிபரிசரூபசெம்ப வளவதரவூறல்கந்த
முழுதுமொருசேரவுண்ட லதுவேதா
னிகரில்கதியாகுமென்று செவிமெய்விழிவாயதுண்ட
நிதமிடையருதருந்த மனமாவா
நிலையவதிலேயழுந்த வடியனுணராதலைந்து
நெறிபிறழமாழ்கிலென்று னடிசேர்வே
னகிலமுழுதாயவண்ட முநிகிலசராசரங்க
ளவையுமகலாதுறைந்து கனல்கானீ
ரவனிவெளிபூதமைந்து பொறிகருமமாயவிந்தி
யமுமிரதமாதியைந்து மனமோடே
மிகுகரணநாலுமுந்து கலையைமுதலேழுமைந்தும்
விரவுநினலாதியங்கும் வலிகூடா
விதாடவுமீசவென்றன் விரியுமனமாதிநின்கண்
விழையவருள்கூர்சிகண்டி மலைவாழ்வே. (உ௪)

வேறு.

தானத்தானனதனதனதந்தன
தானத்தானனதனதனதந்தன
தானத்தானனதனதனதந்தன தனதான.

மாகத்தேசெழுமுன மள்கந்தனின் மூழ்கிப்போய்மலர்பல
கொடுநந்தனம் வாசந்தாமமொய்கணிதொடை
யிண்டைசெய் துதவாதேன்
வாழ்பொற்சேதிமமலகிடறுங்கமு ருவிற்கோமய
மெழுகுதன்முன்பல வாரத்தோடுசெய்
பணிகடினந்தின முயலாதே
ஞகத்தார்மயிர்புளகமரும்பிட வேகத்தீயிழுதெனவு
ணெகிழ்ந்திட வாடிந்தோமறுதுதிக
டழும்புற வுரையாதே
ஞதற்பாலனவிவையறவம்பினி னீதிக்கேடுகள்
பலபுரிவஞ்சக ஞதற்போதமிலடியவர்
சங்கம நுறுவேனே
சாகத்தீவரசிறைகொளுமுன்புள வாகைச்சூரனெ
டுயர்பதுமன்புகழ் தாவக்கோளரிமுகன்
முகசூஞ்சர னிவர்நால்வோர்

தாமிப்பாரரசிடருளதின்பொரு வாமெய்ப்பான்மை
யதுறுதவமென்றுள தானைக்காவலி
னரசதைமந்திர ரிடையியா

நாகத்தாய்முலைவடுவுறுகம்பர்த மூரிற்போய்மிகு
தவநிலைநின்றுஃ நாடச்சேவடிமுதுகு
கொள்பைம்பரி பதமாவா

நாகப்பாயனுடையனிவர்புந்தி யினுலக்கேகயமுனு
நினைவின்படி நாமச்சாருபமருள்
சிகியங்கிரி முருகோனே. (உரு)

வேறு.

தனதத்ததானதந்ததாத்தன
தனதத்ததானதந்ததாத்தன
தனதத்ததானதந்ததாத்தன தனதானு.

உமைமெய்ச்சிவாகமஞ்சொறிக்கையு முருவத்தரூப
லிங்கமூர்த்தியு முளமுற்சிவோகமங்கண்
மேற்கொளு முரவோர்பா

லுரிமைக்கொடாய்சுகந்தவிப்பல விரைசுற்றுதூப
முந்துதூச்சுட ருடன்மற்றியாவுமொன்ற
வீட்டிந விடமாதீ

தருசுத்தியாயகண்டமொப்படி கமதொக்குமேனிலிங்க
மேட்டெணி தயபத்மமீதிலங்க
நாட்டியு ளயர்பூசா

தகைமுற்றியாவுகந்ததீர்த்தன்முன் வெளியிற்செய்
பூசையுங்கொள்பாக்குரா தகவற்பினேதி
யந்தமாப்பரன் விடையியா

வருளுய்த்ததாவுணர்ந்தமூர்த்தியை யுறவைத்து
வேதியின்கணேத்தியெ ணலர்புட்பமாதி
தந்துநீக்கிமுன் மலராதீ

பவனெய்ப்படீரமந்தமாட்டிமு ழுளரத்ன
பீடவும்பரோற்றிமை யறுசுத்த
பூதிசந்தமாக்கதை யறுகேகூ

விரமற்றெலாமணிந்து கோட்டிவிள் புகைநெய்க்
கொடைபமுண்டியூட்டியிவ் வினைமற்றும்
வீகுடங்கைநீத்தமொ டுதவா நூல்

விதிமுற்றுபூசையன்பினுற்றியென் வினையொத்தலாதி
கொண்டுமேற்கதி விரவச்செயாய் சிகண்டி
கோத்திர முருகோனே. (உசு)

வேறு.

தன்னந்தனத்தனதனனுதன
தன்னந்தனத்தனதனனுதன
தன்னந்தனத்தனதனனுதன தனதானு.

முன்னங்கெடத்துயிலுறுவோர்கையின் மன்னும்பொ
ருட்கழலுறுமாறென முன்னங்கியற்றுகிரி
யைசோர்வுற வெழுகாலான்

முன்னங்கிமிக்கெழவுருகாமதி பின்னின்பபுத்தமு
தொழியாதுற முன்னுண்டுமேற்றதை
யறுதானமு முறையேகா

வென்னந்திடச்சுழுமுனையாநெறியின்னந்தரத்தவுன்
மனைமேவில கெண்மங்கலச்சுபசிவ
ரூபமு ளொருவாதே

யெண்ணுந்தகைக்கொடுவருசாருப மன்னுந்திறற்பெறு
சிவயோகிய ரின்னஞ்சபைக்கருகெளியே
னுற வருள்வாயோ

வின்னந்திசைச்சரவணவாவிய பின்னம்பகக்கொளு
முருவாறையு மின்னங்கயற்கணியுமை
யாடன பதியோடா

வின்னங்கடத்திருபதமாறிரு தண்ணம்புயக்கரமுக
மாறுறவிண்ணம்பழிச்சுறுதிருமே
னியை யொருசேராத்

தன்னந்தனித்தவருளமேநிகர் பொன்னம்பலத்தரு
ணடமேவிய தன்னம்பதிக்குளமகிழ்
சூர்தர வினிநீயாத்

தம்முன்புமத்தியுனுறவேகொடு துன்னுங்களிச்சல
    தியின்மூழ்குறு தன்முந்நளித்தருண்
        மயின்மாமலை முருகோனே. (உஎ)

வேறு.

தனதானதத்ததந்த
தனதானதத்ததந்த
தனதானதத்ததந்த தனதான

பதினாலெனப்புகன்ற நிகிலாகமத்தமைந்த
    பயன்வாய்வடித்திலங்கு மருணூலோர்
பதினாலவைக்குமுந்தி யவுதாரணத்தபந்தர்
    பயில்வாய்மையப்பர்நம்பி மணியேயா
முதுவாசகத்தர்முன்சொல் பெரியோருயிர்க்கிரங்கு
    முனமேவெளிக்கொணர்ந்த சிவவாசா
முறையாவுமற்புடன்சொ லதிகாரமுற்றுணர்ந்து
    முனியாவருட்குணங்க ளிருநாலார்
பதியாரருட்கிடஞ்செய் சிவமேயெனத்தொழிந்த
    பசுவேயெனத்துணிந்து ளதுநாமாம்
படிவாழ்வொழித்துடன்சொன் முளைபோலெமக்குநின்று
    பளகேவிளைத்ததென்று மலமோரா
விதியோடடைத்தகைந்து மனமாகிமுற்றொழிந்து
    விளைவாய்மைநிட்டைகொண்ட தகையோரே
வியசேவடிச்செய்தொண்டென் முடிமேல்வகித்துடன்செல்
    வினைதாமயிற்சிலம்பின் முருகோனே. (உஅ)

விதியான்மணத்தில்வந்த மனையோடகத்திருந்தை
    விதவேள்வியைத்தினஞ்செய் தொருவாநாள்
விழையாதவட்புணர்ந்து மகவேபெறற்குவந்து
    விரவாதுலர்க்கரும்பொ னுறவியா
விதமாவிருத்துவந்து ணமுதாருவித்தன்முன்செ
    யிலமாவறத்துநிள்ற திலனுயே
னிதுவோவிதிக்கடந்து மதமாவினிற்றிரிந்து
    ளிசைபாதகத்தனந்த முபரியேன்

மதுவார்கடப்பணிந்தபுயமீதடிக்குளன்பர்
வரமேமிகுத்தசெஞ்சொன் மலர்மாலா
மணமேசெறித்தகந்த புலியூரவைக்கணின்று
மகிழ்மாநடத்தன்மைந்த விமையோர்வாழ்
முதுவானழற்கருந்தவிடபோதகற்றடிந்த
முரண்வாகுளத்தமர்ந்த மணியேயான்
முனைநாள்வினைக்குணின்றி வகையேபவத்தழுந்தன்
முறையோமயிற்சிலம்பின் முருகோனே. (உக)

அருணூலுறத்தெளிந்து மனையாதிபற்றொழிந்து
ளருள்வாயடக்கமன்பு பொறைமேவா
வகமேன்முதுக்குறைந்து புலனுதியைக்கடந்தை
யனலூடறற்குணின்று வெயின்மாரீ
தருநாளுடற்கசங்க வடகாதிதுய்த்தொடுங்கு
தவமேயியற்றிமந்த நடையோடே
தனையூருயிர்க்குமன்பு கொளலேமுதற்புகன்ற
தகுமேலறத்துநின்ற திலனுயேன்
குருகார்பெயர்த்தடங்கொல யில்வேன்மலர்க்கைகொண்ட
குரநீபம்வெட்சிதுன்று புயவீரா
குறையாவிடர்ப்பவஞ்ச மதிலேவிழித்தகண்கள்
குருடாயுனைத்தெளிந்து துயில்வோர்பா
லொருவாதுளத்தமர்ந்த வொளியேகுரக்கினின்க
ணுறுநேகிடைத்திலன்பி னுயுமாறே
துளபூசையிற்றொடர்ந்தென் மலநோயகற்றியின்ப
முறவாண்மயிற்சிலம்பின் முருகோனே. (கூய)

மயின்மலைச்சந்தவிருத்தம்

முற்றிற்று.

உ

சிவமயம்.

# குன்றைச்சிலேடை வெண்பா.

## காப்பு.

சீரார் மயூரகிரிச் செவ்வே டிருவடியிற்
ருரார் சிலேடைவெண்பாச் சாத்துதற்கிங்—கோரார்ந்த
தோகையடி மேவியுறை தூமதக யானனன்மெ
யீகையடி யேபரவி னேன்.

## நூல்.

பூமேலான் போல்வாரும் பூவணரு மாவணருங்
கோமேத மாற்றிவருங் குன்றையே—யேமேவன்
பீதந் தமிழ்தந்தா னென்னமுனஞ் சண்பைவந்து
வேதந் தமிழ்தந்தான் வீடு. (௧)

யாப்பிட்ட செய்ந்நீரும் யாவரையு மான்றோருங்
கூப்பிட் டறமோதுங் குன்றையே—பாப்பிட்ட
கங்கணத்த ராஞர் களிக்குமிளங் காதலஞ
ரங்கணத்த ராஞ ரகம். (௨)

காவுந்தன் சிந்தையருங் கன்னியர்வா யின்னிதழுங்
கோவங் கடுக்குஞ்சீர்க் குன்றையே—வீவிதென
வீரும் பிணிமுகத்தன் பெய்தினரெய் தாமையருள்
கூரும் பிணிமுகத்தன் கோயில். (௩)

மேழிப் படகெரினு மீயிலங்குங் கோயிலங்குங்
கோழிக் கொடியெறியுங் குன்றையே—பாழி
யுருமுருகாற் றுப்படையா ரோதினரைத் தீண்டாத்
திருமுருகாற் றுப்படையார் சேர்வு. (௪)

ஒன்றியவில் வீரர்புய மும்மடவார் கண்முலையுங்
குன்ற வலம்பழிக்குங் குன்றையே—நின்றிடநீர்

கிரமயில் வாகனத்தான் கேசமுடியிற் புடைத்தான்
வீரமயில் வாகனத்தான் வீடு. (ரு)

மெய்ப்பற் றினர்வினையை வெம்பணிகள் செம்பதத்தைக்
குப்புற் றிடத்தாக்குங் குன்றையே—துப்பா
ரழற்பரசார் கான்முனையா ரன்பினு லென்றுங்
கழற்பரசார் கான்முனையார் காப்பு. (சு)

பொங்குமலர் வாவிகளும் போதிரத வீதிகளுங்
கொங்குமலர்ப் பொன்னூருங் குன்றையே—தங்கு
மகத்தியன்மெய் யாசிரிய வன்பரைத்தாள் சேர்ப்பா
னகத்தியன் மெய் யாசிரிய னூர்வு. (எ)

காலுந் தனங்கனூறு காமுகரிற் கோமறுகிற்
கோலஞ் செறியுஞ்சீர்க் குன்றையே—மாலுண்ட
வாசகம லத்தா ரடையவொணுச் செஞ்சரண
வாசகம லத்தார் மனை. (அ)

நம்பினரைத் தானுங்கன் னற்பாக மைப்பாருங்
கும்பிவிடா தாசரிக்குங் குன்றையே—யம்புயனுன்
மேற்படைப்ப தாகையர்ன் வெம்பவஞ்சே ராதருள்வான்
காற்படைப்ப தாகையான் காப்பு. (கூ)

மேவித் தமிழ்நூலாய் விற்பனரு மிப்பர்களுங்
கோவைக் கலைமதிக்குங் குன்றையே—பாவையெழ
வக்குடத்தி டக்கையத்த னத்தளிக்க னற்பினிற்செய்
குக்குடத்தி டக்கையத்தன் கோயில். (ய)

செந்திருவன் னூர்குழலுஞ் செம்மலைநீ டண்டலையுங்
கொந்தளித்து வைப்பார்க்குங் குன்றையே—யிந்துமுடிக்
கங்கா தரனூர் களிப்பவுப தேசமுரைக்
குங்கா தரனூர் குடி. (யக)

வேட்டருத்த நல்லோரை மேவினரும் பார்ப்பினமுங்
கூட்டிவரு மாறுவக்குங் குன்றையே—கேட்டெறிப்
புத்திகரந் தாங்குவான் போற்றவிறற் சூர்தடிந்த
சத்திகரந் தாங்குவான் சார்பு. (யஉ)

கோட்புலநீத் தாருநல்லார் கோதைவண்டுங் கற்பகத்தின்
கோட்டகத்தே மாந்திவருங் குன்றையே—தோட்டலரா
மாலுக் களித்தான் மகவுபெறப் பூசித்த
மாலுக் களித்தான் மனை. (௰௩)

ஊடலினாற் பூண்மகளி ரும்படுக ருந்தருவிற்
கோடலையப் போடுஞ்சீர்க் குன்றையே—சூடுமதிப்
பிஞ்சக் கரவரனார் பேணுமிளங் காதலனார்
விஞ்சக் கரவரனார் வீடு. (௰௪)

ஆற்றுந் தவருநன் னூ லாவலரும் பாவலருங்
கூற்றங் கடக்குஞ்சீர்க் குன்றையே—யேற்றுநின்று
மோதப் படையார் முருங்க வடர்க்குமயிற்
போதப் படையார் புரம். (௧௫)

பண்மேவு தேவாரம் பாடுநரும் பொங்கருமேற்
கொண்மூ வரைத்துதிக்குங் குன்றையே—கண்மீது
தேக்கங் கமலன் றியங்கச் சிறைபுரிந்து
நீக்கங் கமல னிலை. (௧௬)

மாவைப் புனைமின்னார் வாயுமண்டர் தோயுமில்லுங்
கோவைப்பலநேருங் குன்றையே—மூவா
முருகரத்த ரண்ணலார் முன்னருளா ரெஃகந்
தருகரத்த ரண்ணலார் சார்பு. (௧௭)

மஞ்சுறங்கு மாடமன்னர் மைந்தர்களும் பைந்தடியுங்
குஞ்சரங்க ளாரெழுக்குங் குன்றையே—விஞ்சுவரி
ஞால மிசைந்தா னளினத்தான் போற்றுமருட்
கோல மிசைந்தான் குடி. (௧௮)

ஊடுமின்னார் கொங்கைகளு மொள்ளருஞ்செய் மள்ளருமன்
கூடப் பணைத்துவிடுங் குன்றையே—நீடளாமா
தாக்கங் கறுத்தா ரகங்கனிவார்க் கஞ்சுமலப்
போக்கங் கறுத்தார் புரம் (௧௯)

விண்டருவேள் வித்தழலும் வெள்வளைகால் வின்மணியுங்
குண்டமடுத் தேங்கியெழுங் குன்றையே—யொண்டழல்சேர்

பாலத் திருக்கரனுர் பாலகனுர் சூர்தடிந்த
வேலத் திருக்கரனுர் வீடு. (உ0)

தங்கட் குரியாரைத் தையலரு மொய்யளியுங்
கொங்கைத் துணைக்கூட்டுங் குன்றையே—துங்கச்
சடைக்கமல முள்ளான் றனையனினை யார்பாற்
ருடைக்கமல முள்ளான் ருெடர்பு. (உக)

சாடு மதகரியுந் தையலரங் கையிணையுங்
கோட லறச்சாய்க்குங் குன்றையே—கேடுதருந்
துக்கமலத் தாளார் தொழும்பரைச்சேர்த் தாதருளுஞ்
செக்கமலத் தாளார் செறிவு. (உஉ)

வாட்டுந் தவரகத்தை மாய்மனமும் வீயினமுங்
கோட்டங் கலந்திருக்குங் குன்றையே—தோட்டியொடு
பாசங் கரந்தரித்தான் பற்றினையோன் பற்றலரை
நேசங் கரந்தரித்தா னேர்வு. (உங)

மாவித் தகர்முனிவு மாணிழையார் பாற்சுகமுங்
கூவித் தமங்கையுறுங் குன்றையே—கோவித்தா
ரங்கசனம் பண்ணினு ளுழாம லான்மவுணர்
வங்கசனம் பண்ணினு ளுர்வு. (உச)

வண்மைமட வார்குழலு மந்துரையிற் கந்துகமுங்
கொண்மிசைய வந்தடுக்குங் குன்றையே—யொண்மயிலை
வண்டிசைக்குந் தாரான் வனைந்திவர்வான் சேய்நீப
வண்டிசைக்குந் தாரான் மனை. (உரு)

தேசஞ்சேர் வள்ளியர்கள் சேண்மனையும் பாண்கனையுங்
கோசந்தா ழுற்றறியாக் குன்றையே—பேசுமுடி
மீதாந் தரங்கத்தான் வேட்கையுறச் சூக்கமறை
யோதாந் தரங்கத்தா னூர். (உசு)

பிடியைந்த வாலையத்தும் பேரொலிசே ராவணத்துங்
கோடிகம்ப லம்மல்குங் குன்றையே—நீடுகங்கைச்
செஞ்சடையா னுத்தன் றிருக்கரத்தான் சேயுணரார்
நெஞ்சடையா னுத்த னிலை. (உஎ)

காரார் விதரணரும் கைம்மலையின் சீருமருள்
கூரா மிடியடக்குங் குன்றையே—யோராலின்
யோகத் தமர்ந்தா னொருசே யிருமாதர்
போகத் தமர்ந்தான் புரம். (உஅ)

திக்குநில வுங்கொடியுஞ் சீரியமட் காரியருங்
குக்குடத்தை யாற்றுஞ்சீர்க் குன்றையே—நக்ககுழைக்
காதவன சத்தன் கடையேன் முடிக்கணிதாட்
சீதவன சத்தன் செறிவு. (உகூ)

மேவுசிவ பூசகரும் வேட்டுவரும் யாசகருங்
கூவிளையின் பத்திரஞ்சேர் குன்றையே—தாவுமிள
மானென்று கையுடையார் வாமத் தனைநாப்பட்
டானென்று கையுடையார் சார்பு. (௩0)

சீர்மா தவர்களும்வான் சேர்மா ளிகைநிரையுங்
கூர்மா தனமடுக்குங் குன்றையே—சூர்மாவை
யீரு மயிலத்த னேத்துனர்க்கு வாழ்வளிக்க
வூரு மயிலத்த னூர். (௩க)

ஏடாரு நீடாரு மேத்தவரு மாத்தவருங்
கோடாத வன்பாற்சூழ் குன்றையே—பீடாரும்
பூங்க மலத்தனத்தன் புன்கண்டீர்த் தாளுமரு
டேங்க மலத்தனத்தன் சேர்வு. (௩உ)

வள்ளறத்தி னோர்தனமு மாசுரரைப் பூசுரருங்
கொள்ளையா கத்தழைக்குங் குன்றையே—வள்ளிமின்பாற்
சோரமா கேந்திரவன் சூர்தடிந்த கூரயிற்கை
சோரமா கேந்திரவன் றோய்வு. (௩௩)

மாதண்டப் போர்வீரர் மாறகத்துந் தேறகத்துங்
கோதண்டத் தான்மலையுங் குன்றையே—வேதண்ட
மாதிடத்தார் காதிடத்தார் மந்திரத்தார் நந்திரத்தார்
மாதிடத்தார் காதிடத்தார் வாழ்வு. (௩௪)

செம்மைநெறி யோருமறச் செல்வருமின் னார்தனமுங்
கொம்மையுற வாரமருஉங் குன்றையே—யெம்மைப்

பவத்து வரப்பணியார் பற்றறுத்தா ராற்றுந்
தவத்து வரப்பணியார் சார்பு. (௩௫)

தேவாரப் பண்ணவருந் தேம்பணையிற் பூம்பணை யுங்
கோவாலை யம்பயிலுங் குன்றையே—மேவா
ருடலையிலஞ் சாயகத்த ருதையமன் விண்டீ
நடலையிலஞ் சாயகத்தர் நாடு. (௩௬)

சீலத் தவர்க்கருளுந் தேனுறையைக் கானுமனு
கூல முறவாக்குங் குன்றையே—பாலந்
தருமம் பகத்தன் றனையனயி லாற்சூர்
மருமம் பகத்தன் மனை. (௩௭)

ஊர்மாண்ட சீருநல்லா ருண்கட் குடைந்தயிலுங்
கூர்மாண்ட தேசமுறுங் குன்றையே—நார்மாண்ட
கச்சடையா தாற்றுவார் கன்மமுண்பான் சன்மமுற்றிங்
கச்சடையா தாற்றுவா ரார்வு. (௩௮)

மாகனக வாணிகரும் வாவிகளும் வான்மதிலுங்
கோகனக னந்தமரூஉங் குன்றையே—மாகநக
ரங்கிக் களித்தா னழியவென்றோ னன்பகத்தே
தங்கிக் களித்தான் றலம். (௩௯)

துஞ்சகத்தான் றேருமலர் துன்னுபொழிற் புள்ளினமுங்
குஞ்சிதத்தைக் கொண்டாடுங் குன்றையே—நஞ்சுடற்ற
வங்கங் கிரிதந்தார்க் கண்ணரியா ரன்பருக்குத்
தங்கங் கிரிதந்தார் சார்பு. (௪௰)

ஆடியலு மாடவரு மங்கவர்பா லங்கசனுங்
கோடையிலேற் றஞ்செய்யுங் குன்றையே—கேடுதரும்
புன்கண் டுடைத்தளித்தார்ப் புங்கவரைத் தானவரை
வென்கண் டுடைத்தளித்தார் வீடு. (௪௧)

வேட்டதெளி திற்றவர்க்கு மிக்குருகன் பார்க்குமனக்
கோட்டவம்ப லங்கொடுக்குங் குன்றையே—வாட்டு
மிருவினையக் கட்டொடரா ரேத்தியணி நீப
மருவினையக் கட்டொடரார் வாழ்வு. (௪௨)

ஆடவர்பான் மாதருமன் னூர்கணைக்கா ரேண்மொழியுங்
கூடமையங் கண்டாருங் குன்றையே—பாடளிசேர்
வாசவனை யங்கடப்பன் மாழைவரை மேலுருள
வாசவனை யங்கடப்பன் வாழ்வு. (௪௩)

நல்லார் புறவடியு ஞானருங்கா ருண்ணியருங்
கொல்லாமை யங்கடுக்குங் குன்றையே—தொல்லமரர்
தாழும் பதத்தான் றரணியர்பல் லாயிரவர்
வீழும் பதத்தான் விழைவு. (௪௪)

தண்டலைய வாவிகளுந் தையலர்த மொய்குழலுங்
கொண்டலையங் காட்டுஞ்சீர்க் குன்றையே—விண்டுவயன்
றுஞ்சக் கரத்தர் தொழுமையக்க ரம்பொறித்த
கஞ்சக் கரத்தர் களம். (௪௫)

செப்பொருவும் வேற்குமரர் திண்கயத்தில் வண்புயத்திற்
கோப்பமர மாலைபடர் குன்றையே—மூப்பமர
ரூணக் கணியா னுதவமளி யார்கடப்பந்
தேனக் கணியான் செறிவு. (௪௬)

இக்குக் கயலா மிசைக்குயிலும் வாவிகளுங்
கொக்குக் கயலாருங் குன்றையே—திக்குலவு
கண்ணார வந்தணித்தான் கன்னவிர தம்போலென்
கண்ணார வந்தணித்தான் காப்பு. (௪௭)

ஒன்றிநின்றே ழாம்புலனை யோத்தின்முதற் கேத்துதனைக்
கொன்றையந்தீர்த் தன்பணியுங் குன்றையே—யன்றுதனை
வீரமா யூரத்தான் வேண்டவருள் செய்துகொண்ட
சூரமா யூரத்தான் றோய்வு. (௪௮)

ஓவமன்னூர் கால்சொற் குடைகூர்ம மூங்குயிலுங்
கூவத்தி யங்குஞ்சீர்க் குன்றையே—தூவி
யொகரப் பரியா னுணராதார்க் குண்மை
பகரப் பரியான் பதி. (௪௯)

தாட்டா மரைத்தடத்துஞ் சாற்றுமகம் போற்றுழியுங்
கோட்டா குலஞ்சேருங் குன்றையே—பாட்டோவாப்

பூம்பழனத் தானத்தன் பூமகனேற் றுப்பெற்ற
தாம்பழனத் தானத்த னூர்வு. (ருய)

மாதனங்கள் மானுமின்னூர் வாஞ்சையரிற் பூம்புறவிற்
கோதனங்கள் றுள்ளிவரும் குன்றையே—யாதனென்க
னெஞ்சத் துகந்தா னிலேகெடினு நீங்காதே
தஞ்சத் துகந்தான் றலம். (ருக)

ஆசங்கை தீர்ந்துணர்ந்த வாதியரி னிதிமன்றிற்
கோசங்கை யாரமருங் குன்றையே—மாசங்கை
யேய்ந்த கரத்தா னிறைஞ்சுபுவாழ்த் துந்தலைமை
வாய்ந்த கரத்தான் மனே. (ருஉ)

தேடப் படுங்குரவர் சித்துஞ் சிதசித்துங்
கூடத்த னென்றோதுங் குன்றையே—கேடற்ற
வாயில்கட வாதார் மனங்கடந்தார் மாண்டமனக்
கோயில்கட வாதார் குடி. (ருங)

எத்திறைஞ்ச லேகுனரு மேற்றுமணம் போற்றுநருங்
கோத்திரமுன் னேகிச்செய் குன்றையே—காத்திரத்தி
லண்டுறைவா னத்த மருள்சரவ ணம்மயிலாற்
கண்டுறைவா னத்தன் களம். (ருச)

மித்திரரும் வேண்டுவன வேண்டியாங் குற்றோருங்
குத்திரஞ்சூ ழாமுளாஞ்சேர் குன்றையே—வத்திரமோ
ராறுடையா னேரா ரகமுடைத்தா னன்பில்லார்
மாறுடையா னேரார் மனே. (ருரு)

மாகுலமைந் தற்பெறவு மாணிழையார் பாண்பெறவுங்
கோகுலங்காப் பான்மருவுங் குன்றையே—யாகுலஞ்சே
ருள்ளத் திருக்கறுப்பா னுட்குலேயி லொன்றெமர்த
முள்ளத் திருக்கறுப்பா னூர். (ருசு)

தேவர்புரி யும்மறுகுந் தேம்பொழியும் பூம்பொழிலுங்
கூவிரங்க ளாரமல்குங் குன்றையே—மூவரணங்
காய்ந்த சரவணத்தன் கட்டோன்றி னூரிருபா
லேய்ந்த சரவணத்த னில். (ருஎ)

தம்பமிலா யோகருந்தீக் கைக்கிரியா தேசிகருங்
கும்பகமம் பூரகஞ்செய் குன்றையே—வம்பகற்று
புல்லணியங்கை தீண்டினார் போற்றுபஞ்ச வற்களிப்பா
னன்னணியங்கை தீண்டினார் நாடு. (௫௮)

வேட்டகிடை யுந்தடமு மென்மொழியார் வன்முலையுங்
கோட்டியக லாரமலருங் குன்றையே—மோட்டிமையோர்
யூகங் கடந்தா னுழுவலன்பர்க் கேயமல
போகங் கடந்தான் புரம். (௫௯)

ஆலக் களமர்களு மாணவரு மாணவருங்
கோலிக் கலைதேற்றுங் குன்றையே—வேலை
வனசரர்மான் வேட்டார் மலர்க்கரத்தார் சேயார்
வனசரர்மான் வேட்டார் மனை. (௬௰)

நம்பிவதி வோருமத நாளுமிகு மோளிகளுங்
கும்பிபா கங்கடக்குங் குன்றையே—வெம்பரிதி
கையான வத்தான்சேய்க் கண்கெழுமு தண்கழலெ
மையான னத்தான்சே யார்வு. (௬௧)

பாடகமுற் பூட்புனையும் பாங்கரினும் பூங்கடத்துங்
கோடரந்தா னத்திவருங் குன்றையே—சூடுந்
தலைமாலைத் தாரான் றனையனடி யேற்குப்
புலைமாலைத் தாரான் புரம். (௬௨)

செய்யும் பணியினராற் சேதிமமு மோதியருங்
குய்யங் களைந்தேறுங் குன்றையே—யையஞ்சென்
றேற்கு மரனு ரிணைப்புயத்தே றிக்குலவும்
வேற்கு மரனார் விழைவு. (௬௩)

பாளிதமா ராகத்து பார்த்திபரில் வார்த்தெருவிற்
கோளிதமா லங்கண்மிகுங் குன்றையே—வாளிதமா
வென்னவரு கண்ணு ரிடைமயக்குற் றூர்பவர்க்க
மன்னவரு கண்ணூர் மனை. (௬௪)

ஓமகனை யுந்தழலோம் புத்தமர்க்கு முற்றுயிர்க்குங்
கோமகனை யங்கடருங் குன்றையே—தோமகனை

யுந்தாட் டணிதந்தா ரும்பரசு மின்புறவு
வந்தாட் பணிதந்தார் வாழ்வு. [௬௫]

வேட்டதவர் மீட்சிபெற்ற மென்கொடியா ரும்பகமுங்
கூட்டரவின் பைநேருங் குன்றையே—பாட்டளிபண்
பாடு நிபத்தான் பலகோடி யண்டமுற்றுக்
கூடு நிபத்தான் குடி. [௬௬]

மாணிழையா ரம்மனையும் வந்துவடக் குந்தவருங்
கோணையுற வோடிவருங் குன்றையே—வேணியிடத்
திந்த மலையா ரிசையமலை யார்கயிலைக்
கந்த மலையார் களம் [௬௭]

மட்டையலர்க் காவுமள்ளர் வன்கரனும் பஞ்சணையுங்
கொட்டை யடுக்குஞ்சீர்க் குன்றையே—பட்டினத்தார்
சீர்வாக் கிடைக்கழியார் சேந்தனார் தம்மிசைப்பா
வோர்வாக் கிடைக்கழியா ரூர் [௬௮]

தேத்தளிசூழ் பூத்தடமுந் தீந்தடிமிக் காந்தடியுங்
கோத்தமரஞ் சூழவுறுங் குன்றையே—யேத்தார்
கருத்தணிகை மால்வரையார் கண்ணீலம் விள்ளுந்
திருத்தணிகை மால்வரையார் சேர்வு. [௬௯]

போதார் சரவணத்தைப் போலாமை யைநண்பைக்
கோதா வரியுமுறு ங்குன்றையே—தீதா
ருருப்பரங்குன் றத்த னொளிர்மலர்த்தாள் காட்டுந்
திருப்பரங்குன் றத்தன் செறிவு. [எ௰]

வண்டலையுந் தண்டலையு மாதவர்தங் காதகமுங்
குண்டலமஞ் சாருஞ்சீர்க் குன்றையே—தண்டதர
னச்சி ரலைவாயா னஞ்சாறு வந்தருளு
மச்சி ரலைவாயா னூர்வு. [எக]

வாழுநல்லு முத்தியர்கள் வார்களையைக் காசறையைக்
கூழையிடை யாதரிக்குங் குன்றையே—யாழியங்கைப்
போற்று வினன்குடியார் பூங்கமல னுங்கடைந்து
போற்று வினன்குடியார் பொற்பு. [எஉ]

மாரகைவே ளிற்பொழுது மாகவளம் பாகர்களுங்
கோரகைமா விற்களிக்குங் குன்றையே—நேரகையா
நாரகத்து முள்ளா நவையுறுமென் காரகத்து
மேரகத்து முள்ளா னிடம். [எ௩]

போதுகமென் றோரடிச்செல் புண்ணியரி னன்னிலத்திற்
கோதுமைமுன் னுவிலகுங் குன்றையே—மாதுலனை
வென்றுதொறு மேயாநல் வேயூது வான்போற்றுங்
குன்றுதொறு மேயான் குடி. [எ௪]

துப்பதரத் தாருமதத் தோலடக்கும் பாலர்களுங்
கொப்பங் குழையணியுங் குன்றையே—முப்பொற்
பழமுதிருஞ் சோலையத்தன் பைந்தமிழ்க்கூ டற்பாற்
பழமுதிருஞ் சோலையத்தன் பற்று. [எ௫]

தாளிணைசேர் மாதரினுற் சாதமகக் காதலினுற்
கூளியரன் பாங்ககலாக் குன்றையே—தாளு
ளமரப் பதியார்க் கருள்புரியா ரன்பார்
சமரப் பதியார் தலம். [எ௬]

தேடொப்பு மைக்குமன்றல் செய்மணக்கும் பொய்கைகட்குங்
கோடித் தலம்படைக்குங் குன்றையே—பிடித்த
வெங்கோட் டிருக்கையான் வேறுகண்டின் பாரவருள்
செங்கோட் டிருக்கையான் சேர்வு. [எ௭]

மேலா மறையோதும் வேதியர்பாற் காளையார்பாற்
கோலா கலமண்டுங் குன்றையே—மாலா
ரழனி வரையா ரயிற்படையார் சேயார்
பழனி வரையார் பதி. [எ௮]

சாடும் பணவரம்பைத் தச்சருலை வாயிரும்பைக்
கூடம் புடைத்தகற்றுங் குன்றையே—நீடுகங்கை
மிக்கதிர்கா மத்தகத்தார் வெற்பனையா ருட்களிகூ
ரக்கதிர்கா மத்தகத்தா ரார்வு. [எ௯]

நம்பிசைநூ லாருமின்னுர் நன்னடிறேன் மென்னடையுங்
கும்பகாம் போதிமஞ்சார் குன்றையே—கம்பரமர்

கச்சினக ரத்தமர்வான் காண்குமர கோட்டமெனு
மச்சினக ரத்தமர்வா னூர்வு. [௮0]

மாணார் பொழிலுநல்லார் வார்க்குயமு மேர்ப்பகமுங்
கோணாக மேயுஞ்சேர்க் குன்றையே—சோணசை
லத்தமருங் கோபுரத்தார் நன்முகமோ ராறிரண்டா
றத்தமருங் கோபுரத்தா ரார்வு. [௮௧]

துய்யனநீள் சாலைகளாற் றன்னிவரங் கொள்கருத்தாற்
குய்யகர முற்றேகுங் குன்றையே—மெய்யு
ளொருமையிலை யாசரித்தா ருள்ளத்தார் வாசந்
திருமையிலை யாசரித்தார் சேர்வு. [௮௨]

துப்பா ரிகல்வீரர் தோளும் பணையுஞ்சொற்
குப்பாய மார்க்குஞ்சேர்க் குன்றையே—யற்பாய்
வருவேங் கடமலையார் மாலுருவ மாய
திருவேங் கடமலையார் சேர்வு. [௮௩]

ஒன்றுணர்வோ ரிற்றொறுநா வுக்கரசும் வெற்பர்களுங்
குன்றிற் சவரிலையோர் குன்றையே—யொன்றுளத்தோ
ரூனச் சிராமலையா ரொப்பகல்வாழ் விற்பதிப்பார்
வானச் சிராமலையார் வாழ்வு. [௮௪]

ஓதுமுப்பொ ருட்குவமை யுந்தவரு மந்தணருங்
கோதமனா ரென்றுரைக்குங் குன்றையே—சீதநிப
வாகத்தான் போற்று மருணகிரி யார் பாட்டின்
மோகத்தான் போற்று முகம் [௮௫]

சேட்டத் துவங்கடந்தோர் சேரிடமு மாருயிருங்
கூட்டத் துவிதமுறுங் குன்றையே—காட்டவனல்
போலாவிக் கண்ணிவந்தான் பூமேற் சரவணமென்
மேலாவிக் கண்ணிவந்தான் வீடு. [௮௬]

ஞண்மா மறைமுதலைத் தூயதிரு வாசகத்தைக்
கோண்மோ கனத்தோதுங் குன்றையே—தாண்மோக
மேவான ரைப்புரப்பான் மேவா தருள்புரிவான்
பாவான ரைப்புரப்பான் பற்று. [௮௭]

சீரியபோர் வீரர்களுஞ் செய்யமணி மாளிகையுங்
கூரியல்வா ளங்கையுறுங் குன்றையே—காரி
யலைவிரிக்கும் வேலை யகங்குலைந்த வானோர்க்
கலைவிரிக்கும் வேலை யகம். (அஅ)

வாளரியன் றூரத்து மாலையினு மாட்சியினுங்
கோளரியுஞ் சாந்தமுறுங் குன்றையே—சூளிகையைச்
சூர்முன் படுத்தான் றொழுமுன் முழுதுலகு
மார்முன் படுத்தா னகம். (அசு)

ஓம்பார்தம் பாலல்லா லுத்தமருந் தத்தையுங்கை
கூம்பா விலசகலஞ்சேர் குன்றையே—காம்பார்
புயக்குறவ மானூர் புலவிதணித் தின்பே
நயக்குறவ மானூர் நகர். (சுய)

மேவியகற் றொண்டரும்போர் வீரருமா னூர்களமுங்
கோவில் வலம்புரிநேர் குன்றையே—பூவுலகோர்
பாவோதி யாண்டார் பயன்கருதித் தோடாதிப்
பாவோதி யாண்டார்பதி. (சுக)

வாடா மகவினமு மானூர் களங்கன்னுங்
கோடா யரங்கடுக்குங் குன்றையே—கூடுமிரு
மாதருக்கு வந்தான் வயங்குகம்பத் தன்றருணை
நாதருக்கு வந்தா னகர். (சுஉ)

பாடகமா யோதியரும் பார்த்திபருஞ் சீர்த்தடமுங்
கோடகமேற் றஞ்செய்யுங் குன்றையே—கோடகமுன்
விண்டவனை வில்லார் விரைமலர்த்தாள் சேர்க்கவருள்
கொண்டவனை வில்லார் குடி. (சுஙு)

சேட்டனுவை மாறிலதாற் றேராகஞ் சூட்டனமுங்
கோட்டலையி லாடிவருங் குன்றையே—நீட்டுமெதத்
தும்பிக்கை யீர்ந்தார்த் துணைவனூர் தோன்றுதொட்ட
நம்பிக்கை யீர்ந்தார் நகர். (சுச)

மாதான வள்ளியரு மன்றல்புரி மாணிகளுங்
கோதான முன்செய்யுங் குன்றையே—யாதானம்

பண்டு புறந்தருவான் பாழ்ஞ்சமண்மீ தாஞ்சைவங்
கண்டு புறந்தருவான் காப்பு. (௯௫)

நாடுதுணை வர்ப்பிரிந்த நங்கையரு ஞானியருங்
கூடல் வளாந்தமருங் குன்றையே—யாடலையா
ரச்சு ரலைத்தா னருணோக்கி னாலலைத்தா
னச்சு ரலைத்தா னகம். (௯௬)

பாடகர்பா டற்கமைந்தும் பாவையர்க ளக்குடைந்துங்
கோடவதி மாடகஞ்சேர் குன்றையே—யாடலஞ்சு
ராம்பிரமங் கட்டா னகம்பிரமங் கூறுதெற்
காம்பிரமங் கட்டா னகம். (௯௭)

எம்பரவான் றேரிடஞ்சென் றேத்துநருந் தேர்த்தொகையுங்
கூம்புகரத் தோடமருங் குன்றையே—தேம்பலுறு
சங்கேதங் கையார் தமையகல வீட்டியருள்
சங்கேதங் கையார் தலம். (௯௮)

தேசமரும் வேதியருஞ் சீர்தருஞா னந்தானுங்
கோசிகமு னிக்களிக்குங் குன்றையே—பேசுமறை
தேறுவத னத்தான் றிறம்ப வகம்படுத்தா
னாறுவத னத்தா னகம். (௯௯)

மாடமுங்கல் லூரிகளும் வன்புறவுந் தண்பணையுங்
கோடணையி னாகமஞ்சார் குன்றையே—நீடுகொடி
வாரணத்த னாரணத்தன் வாரணத்த னாரணத்த
வாரணத்த னாரணத்தன் வாழ்வு. (௱)

குன்றைச்சிலேடை வெண்பா

முற்றிற்று.

உ

சிவமயம்.

சீகாழி

# ஸ்ரீஞானசம்பந்த லீலாசங்கிரகச்

## சிலேடை வெண்பா.

காப்பு.

பூம்புகலிச் சம்பந்தர் பொன்னடிக்குப் பல்பொருட்கூற்
றாம்புகல்வெண் பாமாலை யாக்குவிக்கு—மோம்பருளே
பூண்டபிள்ளை யார்பொன் புனைமருப்பொன் றேந்துமங்கை
யாண்டபிள்ளை யார்பொன் னடி.

பூமாரி வேணியன்பர்ப் போற்றுநருங் கோற்றேனுங்
காமாரி யின்வீழுங் காழியே—தேமாற்கீழ்
மோனசம் பந்தன் முதுவரைத்தாய் மேவுதிரு
ஞானசம் பந்த னகர். (க)

போரிபத்தின் சீருமொலி பொங்கருவி யங்கிரியுங்
காரரவ மேயுஞ்சீ காழியே—நீர்நாடன்
றாற்றுந் தவந்தா னரியதென்றோ தப்புவிகல்
லாற்றுந் தவந்தா னகம். (உ)

சீரணப்பு ராணிகருஞ் சேயிழையா ராய்களனுங்
காரணத்தி னாடுஞ்சீ காழியே—யாரை
வரமனா ரென்றார் மதுரையாற் கெம்மூர்
பிரமனா ரென்றார்தம் பெட்பு. (ங)

மன்னலங்கை மள்ளர்களு மற்புரிவார் பொற்புயமுங்
கன்னலங்க ணாட்டுஞ்சீ காழியே—முன்னுருப்பே
ராதியடை வில்லா ரமணிருண்முன் னீங்கமறைச்
சாதியடை வில்லார் தலம். (ச)

போர்மயல்செய் கண்ணார் பொலன்சாய லுங்குருகுங்
கார்மயிலை யாருஞ்சீ காழியே—நீர்சூழ்

கௌணியர் கோத்திரனூர் காதலித்தா ரேத்துங்
கௌணியர் கோத்திரனூர் காப்பு. (௫)

தீக்கைகொள்வார் சென்னியினிற் றேசிகருந் திண்டலையும்
காற்கமலங் கைம்மடுக்குங் காழியே—நோற்றசிவ
பாத விருதயனூர் பாற்பிரம தீர்த்தத்திற்
போத விருதயனூர் பொற்பு. (௬)

ஆயம் பயின்மின்னா ரங்கயன முந்துசெப்புங்
காயம் பரிக்குஞ்சி காழியே—நாயகர்பா
லாயும் பகவதியா ரங்கையிற்கொண் டுண்மகிழ
வேயும் பகவதியா ரில். (௭)

நத்தொலியும் புன்மதத்தை நாவலரும் காவலருங்
கத்தவிய மாற்றுஞ்சி காழியே—புத்தரமண்
கங்குற்று வந்தான் கழியநோற் றூர்க்கருளா
லங்குற்று வந்தா னகம். (௮)

அங்கங் கிரிகயலை யாவியினின் மாவயலிற்
கங்கம் புதைந்தெடுக்குங் காழியே—யங்கயிலைத்
தாதையா ரம்புயத்தார் சார்பினின்றிப் பாருதித்தார்
தாதையா ரம்புயத்தார் சார்பு. (௯)

ஏதில்சிவ பாத விதயர்தவ மும்பொழிலுங்
காத மணக்குஞ்சி காழியே—யாதிரைநா
ளெய்தவந்தி ராவிடந்தா னேழிசைபார் சைவமுயர்
வெய்தவந்தி ராவிடந்தா னில். (௰)

மன்றூர்க்கு மென்பாற்கும் வந்துசெய்பூ சைக்குமுன
தன்றும் பிரமரங்கூர் காழியே—யன்றூலின்
பங்கிரை யாடினன் பாத விதயரகஞ்
செங்கிரை யாடினன் சேர்வு. (௰௧)

சென்றுவரு மானிரையுஞ் செங்கையினி னங்கையருங்
கன்றை யடக்குஞ்சி காழியே—கொன்றைமுடிப்
பாலாட்டு வார்க்களிப்பார் பாலகர்தஞ் சீர்சொல்லித்
தாலாட்டு வார்க்களிப்பார் சார்பு. (௰௨)

மாணிற்கலை யார்மகவு மானவரும் வண்பணையுங்
காணிக்கை யாரகல்குங் காழியே—வேணியிற்றுஞ்
சப்பாணி கொட்டினர் தாளந் தரற்கிசையச்
சப்பாணி கொட்டினர் சார்பு. (௰௩)

மெல்லியலார் கொங்கையுக்தேன் வேட்டுநுகர் வேட்டுவருங்
கல்லை யிணைக்கலுறுங் காழியே—பல்லிடைவிற்
பாய்முத்தந் தந்தார் பகவதியா ருண்மகிழ
வாய்முத்தந் தந்தார் மனை. (௰௪)

ஏமருமின் னார்விழியு மேத்தினனர் காத்திரமுங்
காமருட லம்பழிக்குங் காழியே—தோமறுமான்
மாறகஞ் சாடினர் மைந்தனர் பேதையார்
சிறகஞ் சாடினர் சேர்வு. (௰௫)

தாவகல மன்பதைக்குஞ் சார்குரவ ரார்வலர்க்குங்
காவலன யப்பார்க்குங் காழியே—மூவாண்டி
ன்ரோடப் போதருவார் நீக்கவும்பின் போர்தார்தஞ்
சிராடப் போதருவார் சேர்வு. (௰௬)

பாவுமெழி லுயகர்தோட் பாவையரும் பாவலருங்
காவியங்க ளேக்குஞ்சி காழியே—வாவியிற்றன்
பாரத் திருந்தா ரகமருட மத்தர்செயப்
பாரத் திருந்தார் பதி. (௰௭)

கொம்மையுறும் பன்மனையிற் கோதகலு மூதெயிலிற்
கம்மியன்மா னம்புலியார் காழியே—விம்மியமு
தம்மேயப் பாவென்று ரங்கணரைத் தோணியைப்பார்த்
தம்மேயப் பாவென்று ரார்வு. (௰௮)

கற்பனகற் ரோர்ந்துரைசெய் காவியரும் பாவையருங்
கற்பனையா யோதியமர் காழியே—வெற்பனையோ
டானேற்று வந்தா னயன்றடத்தன் றுன்றேற்றந்
தானேற்று வந்தான் றலம். (௰௯)

ஈம்புளமும் போர்வீரர் கற்புயமும் பொற்புலமுங்
கம்பங் கடுக்குஞ்சி காழியே—யம்பையன்பர்

சொற்கிணங்கை யேற்றார் சொலக்கறந்த பாற்குழைத்த
பொற்கிணங்கை யேற்றார் புரம். (உ0)

பம்புதட முங்கிடையும் பற்றகன்றார் முற்றுளமுங்
கம்பலையங் கூருஞ்சி காழியே—பம்பகநீர்
வாலமுத முண்டவரன் வாமத்தாய் மாற்றியருள்
பாலமுத முண்டவரன் பற்று. (உக)

பாட்டியனூல் கற்குநரும் பைஞ்சிறைத்த மைஞ்ஞைகளுங்
காட்டகத்தி னுடுஞ்சி காழியே—காட்டுகென
வெச்சின்மயங் கிட்டாரை யெய்யவிரற் சுட்டுணர்த்தா
ரச்சின்மயங் கிட்டாரை யார்வு. (உஉ)

பொற்றுகளார் வீதிகளும் போதகர்பாற் சாதகருங்
கற்றளிநங் திக்கெழுஞ்சி காழியே—பெற்றார்க்குப்
பீடுடைய வோதினார்ப் பெம்மா னிவனென்றே
தோடுடைய வோதினார் தோய்வு. (உங)

மானம் பயிலிசைநூல் வல்லாரு நல்லாருங்
கானம் பயிலுஞ்சி காழியே—ஞானமன்றி
யாக மொழிந்தா ரருநெறிய செந்தமிழ்முற்
றாக மொழிந்தா ரகம். (உச).

பந்தமகல் சிந்தையரும் பம்புமத வும்பல்களுங்
கந்தை யசைக்குஞ்சி காழியே—தந்தைபிற
ராற்ற விசையா ரவனிசெலத் தம்புயமே
லேற்ற விசையா ரிடம். (உரு)

வாளுறுமேல் வாவியுநின் மாமணியார் மாளிகையுங்
காளிதன கங்கடக்குங் காழியே—யாள்கணத்தை
யேவ வரனார்வங் திம்பரெண்ணி ராயிரராய்
மேவ வரனார் விழைவு. (உசு)

ஆலுந்தண் பூம்பணையு மாலயஞ்செல் சிலர்களுங்
காலம்பார்த் தேகுஞ்சி காழியே—கோலக்கா
வுற்றாளம் பெற்றா ருதவுமெழுத் தைந்தெழுதும்
பொற்றாளம் பெற்றார் புரம். (உஎ)

செங்கனிப்போ தங்குழலுஞ் செய்யமணி மாளிகையுங்
கஞ்குலேயுங் காட்டுஞ்சி காழியே—யங்குருவா
ஞதன் புரியார் கனிபள்ளி யந்தணர்வங்
தோதன் புரியா ருழை. (உஅ)

ஆயபற்க னேசிவனென் றுன்றவரு நோன்றவருங்
காயத் திரிபேசுங் காழியே—தாயகமென்
றுள்ளி யமர்வா ருடன்போய்ச்சின் ஞள்கணனி
பள்ளி யமர்வார் பதி. (உகூ)

ஏந்திழையார் மார்பணிபு மேய்விழிபு மாய்காலுங்
காந்தன் னலம்பரிக்குங் காழியே—போந்துதமைக்
காணு ரேற்றுவந்தார் கானயாழ் நீலகண்டப்
பாணு ரேற்றுவந்தார் பற்று. (௩0)

வம்புளம ராச்சுவர்க்க மாதர்கள ளுங்குளனுங்
கம்பு ளமருஞ்சி காழியே—தம்பதிகங்
கூட விசைத்தார்யாழ் கோளுணர்ந்தவ் வாறடுத்துப்
பாட விசைத்தார் பதி. (௩க)

மூப்பிசைநூல் வல்லாரு மூதுணரும் போதகருங்
காப்பியங்க ளுடுஞ்சி காழியே—மாப்புலியூ
ருற்றுங் கெரிநவின்று ரும்பரசிற் றம்பலமுன்
கற்றுங் கெரிநவின்றுர் காப்பு. (௩உ)

நல்லா சிரியருமின் ஞர்புயமும் வார்கயமுங்
கல்லார மாலவரை காழியே—இல்லையின்கண்
வீற்றிருக்கார் காணும் வேட்களமுற் றேயருவார்
மாற்றிருக்கார் காணுர் மனே. (௩௩)

கொந்தலர்சூழ் நந்தனமுங் கோதறுமெய் யோகியருங்
கந்த வகனடக்குங் காழியே—வந்துமன்றி
லாடிஞய் பாடிஞ ரந்தணரைக் கண்டமைலவத்
தாடிஞய் பாடிஞ ரார்வு. (௩௪)

மாணறஞ்செய் வார்மனையு மாவிரைசூழ் வாவிகளுங்
காணந் தழைக்குஞ்சி காழியே—பாணர்முடி

யிண்டப் புகுவாரை யேத்தவெம்மூர்க் கேகுகென்று
வேண்டப் புகுவார் விழைவு. (௩௫)

மைந்தரமர் சேணிடைக்கு மாண்மகளிர் பூண்முலைக்குங்
கந்துகங்க டாவுறுஞ்சி காழியே— தந்தைபுயத்
தேகா தரத்துறையன் றேகுறத்தா ஞேகவழி
மாகா தரத்துறையன் வாழ்வு. (௩௬)

பாவணங்கார் வீதிகளும் பண்பெறுசொற் றண்பணையுங்
காவணங்கள் கால்பாயுங் காழியே—கோவினின்றுந்
தேடி யிறையமர்ந்தான் செல்பவர்துன் பான்மாறன்
பாடி யிறையமர்ந்தான் பற்று. (௩௭)

வெப்பந் தெறுபொழிலும் வேற்றுநகர் போற்றரசுங்
கப்பந் தரமுந்துங் காழியே— சொப்பனத்தின்
விண்டுவர வேற்றூரி வெண்மணிமுன் றும்மறையோர்
கொண்டுவர வேற்றூர் குடி. (௩௮)

தாவிரிமெய்ந் நூனெறியிற் றம்பொருளும் பைம்புலமுங்
காவிரியின் னீரருந்துங் காழியே—பூவுலகுய்
வானத் திவருவார் மாணெழுத்தைந் தோதிமுத்தின்
யானத் திவருவா ரில். (௩௯)

மிண்டபிர மன்றடமும் வெய்வனமுங் கோயிலுமெய்
கண்டங் கரியார்சேர் காழியே—யொண்டரளச்
சின்ன வியம்பவர்தான் சேமதச்சிங் கேறுவந்தா
னென்ன வியம்பவர்தா னில். (௪௰)

பத்தியத்த ருந்தளியும் பத்தரும்போர் பண்ணுநருங்
கத்தியங் காட்டுஞ்சி காழியே—யத்தனருள்
வெண்குடைநி ழற்றுமவன் மேனியமர் வெண்ணீற்றின்
கண்குடைநி ழற்றுறவன் காப்பு. (௪௧)

முத்தமுலோம் புத்தமரு மோனநிலை ஞானரும
கத்திருக்கை யாசரிக்குங் காழியே—நித்த
னரத்துறையன் பாங்குவந்தா னூருளி னாடித்
திரத்துறையன் பாங்குவர்தான் சேர்வு. (௪௨)

அந்தரக்கு மாவியுமின் னூர்குழலு மாயிழையுங்
கந்தரமா ரும்புகழ்ச்சி காழியே—முந்துமுந்நான்
மன்றற் சடங்கடுத்தார் மன்னுதுஞ்சல் வாக்களித்தெற்
றுன்றற் சடங்கடுத்தார் தோய்வு. (சங)

மைந்தரும்போ தும்மருளு மன்னுமஞ்ச னங்களுமு
கந்தருவ ரங்காட்டுங் காழியே—யந்தியினுண்
மந்திரமஞ் சக்கரந்தான் மாமறையோர்க் கென்றவர்சன்
மந்திரமஞ் சக்கரந்தான் வாழ்வு. (சச)

போகிசைநூல் வல்லாரும் போதகஞ்செய் மேதையருங்
காகுளியின் பாங்கமருங் காழியே—வாகீசர்
போதல் செவியுற்றார் புண்ணியப்பே றென்றெழுந்தார்
காதல் செவியுற்றார் காப்பு, (சரு)

எல்யானர் மாளிகையு மேந்துமெழின் மாந்தர்களுங்
கல்யாண மாற்றுஞ்சீ காழியே—சொல்வேந்தர்ச்
சேய்மையினேற் றங்கெழுவார் தேசுருக்கண்டப்பரென்றார்
வாய்மையினேற் றங்கெழுவார் வாழ்வு. (சகா)

வில்லூ ரியன்மறுகும் வீழுமன்றல் சூழகமுங்
கல்லூரி யங்கக்குறை காழியே—கொல்விமழ
வன்மகளை யங்கழித்தார் வன்முயல கன்கழித்தார்
சன்மகளை யங்கழித்தார் சார்பு. (சஎ)

பொங்குபிர மன்றடமும் பூம்புனலார் தேம்பணையுங்
கங்கையக லம்மறுக்குங் காழியே—செங்குனமூர்த்
துன்பாப் பனியிறுத்தார் சூழ்வினையை யவ்வினையென்
னன்பாப் பனியிறுத்தார் நாடு. [சஅ]

மட்டகலும் வானவரு மாண்டணையிற் றேன்பணையுங்
கட்ட மிகக்கவருங் காழியே—பட்டீச்
சரத்தானங் கண்ணினுன் றண்முத்தின்பந்தர்
தரத்தானங் கண்ணினுன் சார்பு. [சகூ]

மென்றாள்சேர்ந் தார்மலத்தை மேதாவுஞ் சேதாவுந்
தன்றா தரிக்குஞ்சீ காழியே—பொன்றுறைசை

யெந்தைகண்முன் பாடினு ரேத்துமகம் போற்றுகெனத்
தந்தைகண்முன் பாடினர் சார்பு. [௫௰]

தண்ணரசு மார்பமுநீத் தாருங்கா வுங்கழையுங்
கண்ணுர மேவுஞ்சீ காழியே—யொண்மூலர்
வாச மடுத்தார்முன் வண்டமிழ்வா சம்மடுத்தார்
நேச மடுத்தார் நிலை. [௫௧]

ஆழியவன் பான்றவரு மாற்றுதவப் பேற்றினருங்
காழிமனைத் தாக்குஞ்சீ காழியே—யாழிசைக்குள்
வாரா மயமொழிந்தார் மாதர் மடப்பிடியுஞ்
சாரா மயமொழிந்தார் சார்பு [௫௨]

நன்னிகரில் சைவத்தைச் சாத்திரருங் கோத்திரருங்
கன்னியா தானஞ்செய் காழியே—யங்கீல
நக்கருக வாக்களித்தார் நல்குவிருந் துண்டார்துன்
புக்கருக வாக்களித்தா ரூர். [௫௩]

மண்டியதஞ் சந்நிதிசேர் வாகினரும் யோகினருங்
கண்டிறவா வாற்றலுறுங் காழியே—கண்டெறுத்
தொண்டனர் வந்தழைத்தார் தூமனைச்சேர்ந் தார்காள
கண்டனர் வந்தழைத்தார் காப்பு. [௫௪]

எண்ணிடு தண்பொழிலு மின்புதவு தண்பெயருங்
கண்ணீரா ருகுஞ்சீ காழியே—தண்மருகற்
சோரவிட மாற்றினர் துன்னிருவர் மன்றறனைச்
சார விட மாற்றினர் சார்பு. [௫௫]

மற்புயமு மானுரு மாணவர்பாற் பேணவருங்
கற்பகலங் காட்டுஞ்சீ காழியே—பொற்புகலூர்
வந்தங் கடுத்தார் மறைமுருக னார்மடத்தென்
பந்தங் கடுத்தார் பதி. [௫௬]

முத்தூர் நகையார் முலைச்சாந்து மன்றலுமேற்
கத்தூரி யம்மடுக்குங் காழியே—முத்துவிதா
னஞ்செவியுற் றருளத்தர் நற்கமலை புக்கமர்ந்தா
ரஞ்செவியுற் றருளத்த ரார்வு. [௫௭]

மேவுமனு நாலுணர்வால் வெப்பகலுந் தட்பத்தாற்
காவலரங் கண்மேவுங் காழியே—நாவரசர்
கூடிவர வாற்றூர்மேற் கொண்டருள்கென் னச்சிவிகை
யூடிவர வாற்று ருழை, [௪௮]

வண்டரள மொண்டடியு மன்னவர்செ யின்னல்களுங்
கண்டகரா விக்கடுக்குங் காழியே—திண்டோணி
யப்பரமர் காட்சியா ரவ்வீழி யிற்கண்டா
ரப்பரமர் காட்சியா ரார்வு. [௪௯]

விழரிய மாதவரும் வெம்பகையை நம்பினருங்
காழகந்தோ லாதரிக்குங் காழியே—வீழியரன்
பொற்காசு கைத்தரித்தார் போற்றியமு தீந்தாரென்
னற்காசு கைத்தரித்தா ரார்வு. [௫௰]

வீசுகொடை யும்பணியும் வேதியரு மோதியருங்
காசினிதந் தானேருங் காழியே—வாசியறப்
பாடினா ருற்றூர் பலர்க்குமுற்கூ றாட்டுகவென்
றாடினா ருற்று ரகம். [௫௧]

பண்ணரங்கும் பாவகரும் பாவையர்பாற் பார்த்திபருங்
கண்ணு ளமருஞ்சி காழியே—திண்கதவங்
காப்பிட்டார் முன்மறையார் கானமர்ந்தார் தாளமர்ந்து
கூப்பிட்டார் முன்மறையார் கோவில். [௫௨]

பொற்கொடியார் சானுவுந்தன் பூங்கரனு மோங்கரனுங்
கற்கடக மாருஞ்சி காழியே...முற்கூடன்
மந்திரியார் மானியார் வாழ்த்தோலை கண்டுறுமா
வந்திரியார் மானியார் வாழ்வு. [௫௩]

பூண்டகிளி யோருமவர் போர்மருவு கார்முகமுங்
காண்டங் கவருஞ்சி காழியே—பாண்டிநாட்
டேகத் தடுத்தார்க் கிசைத்தமைய வேயுருபா
மோகத் தடுத்தார் முகம். [௫௪]

உந்துதவத் தந்தணரு மொண்டடமு மண்டமருங்
கந்த மடையலர்சேர் காழியே—வந்தெதிர்முன்

வாட்டங் கெடுத்தார் வணங்கியெழா மந்திரியை
வேட்டங் கெடுத்தார் விழைவு. [௬௫]

மாத்தகுசி ரும்மரசர் மாளிகையு மேவலருங்
காத்திரவி யம்மாற்றுங் காழியே—யேத்திருவ
ராலவா யண்ணலா ராயொடமர் கோயிலென்றன்
பாலவா யண்ணலா ரார்வு [௬௬]

இக்கிளையா துந்தலரு மென்மருவும் பன்மனையுங்
கைக்கிளையா ரங்கமருங் காழியே—சொக்கரைமுன்
கூடிவலஞ் செய்தார் குளிர்நீல மாமிடற்றைப்
பாடிவலஞ் செய்தார் பதி, [௬௭]

மண்டலர்சூழ் நந்தனமு மன்றவழுந் தென்றலுமா
கண்டலனங் காற்றுஞ்சீ காழியே—கண்டொருபா
னின்றுறை யங்கெடுத்தார் நேர்ந்தரசி யார்நிலந்தாழ்
நின்றுரை யங்கெடுத்தார் கேள், [௬௮]

பொற்பூரும் பூவையரும் போர்விடையோன் பூசகருங்
கற்பூரங் காட்டுஞ்சீ காழியே—யற்புளத்துட்
கூர்ந்தா ரிருந்தார்க் குலச்சிறையார் காட்டுமடஞ்
சார்ந்தா ரிருந்தார் தலம். [௬௯]

சீரியதம் மாதவர்க்குஞ் செப்புமவர் பொற்புயக்குங்
காரிகையா ரங்கடங்குங் காழியே—சார்மடத்தின்
மூட்டங்கி மன்னவன்பான் முந்தமொழிந் தம்மடத்தங்
நாட்டங்கி மன்னவன்பா னுடு. [௭௰]

துப்பமர்ம திற்பொறியுந் தோமகன்ம ராமரமுங்
கப்பணங்கை யாருஞ்சீ காழியே—வெப்பொழிப்பான்
போந்தன்பா னுற்றார் புகவிருவோர் போற்றவந்து
வேந்தன்பா னுற்றார் விழைவு. [௭௧]

சீலமுனி வோர்தவமுஞ் சேணிலவு மாணிலமுங்
காலனையர் கையாற்றுங் காழியே—யாலவாய்
நீறுகைத் தீண்டினார் நிவிமா றன்சுரமுன்
மாறுகைத் தீண்டினார் வாழ்வு. [௭௨]

தொன்றூ மன்பகத்திற் றெல்லரசர் வெல்புய்த்திற்
கண்டயே மாறிகழுங் காழியே—மண்டழலிற்
றென்மறைதன் மைப்படுத்தார் சேரருகர் பேரெரிய
வென்மறைதன் மைப்படுத்தா ரில். (௭௩)

மாகலேதேர் வைதிகர்செய் வண்பலியுந் தண்பணையுங்
காக மடுக்குஞ்சி காழியே—வேகவதி
நீரேற மாறனர் நேரேற வாழ்கதந்தார்
சீரேற மாறனர் சேர்வு. (௭௪)

வேடுவர்கள் வேட்டை வினையான் மிகுமழையாற்
காடினிய வாக்கமருங் காழியே—யேடெதிர்நீர்
வேக மறுத்தார் விரைந்தெடுப்பித் தாரடுத்தார்
மோக மறுத்தார் முகம். (௭௫)

அஞ்சலித்த வர்க்கறனு மார்பொழிலும் வீரருமாக்
கஞ்சுகத்தை யார்க்குஞ்சி காழியே—பஞ்சவன்சொ
லாற்கழுமு ளாரருகர்க் காமெனவா ளாவிருந்தார்
மாற்கழுமு ளாரருகர் வாழ்வு. (௭௬)

சிட்டருந்தன் காவுமறை தேரிடமுஞ் சித்தர்களுங்
கட்டங்க மாறுகைத்தார் காழியே—கட்டவிழ்த்து
நீரோட முந்தினர் நீள்பாவாற் கொள்ளம்பூ
தூரோட முந்தின ரூர். (௭௭)

உத்தாருஞ் செல்வர்களு மோதுதமிழ் வேதியருங்
கைத்தாளங் கையமர்சி காழியே—புத்தனுடல்
வீழ்த்தியுற வாதரித்தார் மீண்டவன்சா ரார்சைவம்
வாழ்த்தியுற வாதரித்தார் வாழ்வு. (௭௮)

மீன்மிசைபாய் வீத்தடமும் வேட்டைவினை வேட்வேருங்
கான்மரையி னம்படுக்குங் காழியே—வான்கடலூர்
நின்று மடுத்தார் நிகழ்த்தவப்பர் பூந்துருத்தி
சென்று மடுத்தார் செறிவு. (௭௯)

விஞ்சனத்த மென்னடையார் வெங்கதுப்பும் பைங்குளனுங்
கஞ்சனத்தை யேயுஞ்சி காழியே—பஞ்சவனுட்

டேற்றுவந்த பண்பாங் குரைத்தப்பர்பாற்கேட்டு
முற்றுவந்த பண்பார் முகம். (அய)

மாண்பா ரறிஞர்களும் வன்னவிலார் பன்னடையுங்
காண்பான்முன் முத்தனமாய் காழியே—யாண்பனைபெண்
ணாக விசைத்தா ரருட்பாவற் றூலவைவீட்
டேக விசைத்தா ரிடம். (அக)

பொச்சமில்போர் வீரர்களும் பொற்கொடியார் கற்குயமுங்
கச்சை யிறுக்குஞ்சீ காழியே—கச்சியின்மாற்
காரப் புரிந்தா ரரனுருவீந் தவ்வுலகஞ்
சாரப் புரிந்தார் தலம். (அஉ)

அற்றூரும் பூதிகற்ப மாக்குநரு மீத்தணிய
கற்றூ மயமறுக்குங் காழியே—யொற்றிநின்றுஞ்
சேய்மையிலே யார்வான் சிவநேசர் சென்றிறைஞ்சப்
போய்மையிலே யார்வான் புரம். (அங)

விற்புருவ நங்கையரு வீரரூர முங்கவியுங்
கற்பகப்ப லம்புரியுங் காழியே—யெற்படலை
தங்கங் கடந்தா ன்றளிப்புறமுன் வைப்பித்தான்
பங்கங் கடந்தான் பதி. (அச)

பொற்புறுமின் னுரெயிறும் போகமுனி யோகினருங்
கற்பங் கடக்குஞ்சீ காழியே—முற்பா
வுருவா யுகந்தா னெழியெண்பா வென்பிற்
றருவா யுகந்தான தலம். (அரு)

ஒண்பா வையர்களனு முந்தியுங்கை மைந்தருமா
கம்பீர மாருஞ்சி காழியே—கும்பமிறப்
பூம்பாவை யங்கெழுவான் புன்சமண்பாட் டிற்புகன்றூ
னேம்பாவை யங்கெழுவா னில். (அசு)

சொல்லியனூ லுந்தமக்குச் சொன்னவள்ளத் தின்னமுதுங்
கல்விமலே யாரளிக்குங் காழியே— தொல்விதிப்பு
ணணத் தடுத்தார் நவிலுமணம்பூம்பாவைமக
ளாணத் தடுத்தா ரகம். (அஎ)

நாமருபோர் மைந்தர்களு நச்சுதவர்க் கேழையருங்
காமரச மூடடுஞ்சீ காழியே—பூமணம்பா
ரையமகம் போற்றுவா ணூற்றுகென வேற்றனன்பின்
வையமகம் போற்றுவான் வாழ்வு. (அஅ)

வில்லொன்ற மாணவரை மேதையரு மூதியமுங்
கல்லென்ற றையுஞ்சீ காழியே—நல்லூரிற்
சிலமுற நம்பாண்டார் சென்றெதிர்போற் றப்புகுந்தார்
ஞாலமுற நம்பாண்டார் நாடு. (அகூ)

மாலங்க ணூர்பொழிலு மாதவருஞ் சாதகருங்
காலங் கடக்குஞ்சீ காழியே—நீலநக்க
ரஞ்சடங் காதரித்தா ராற்றுமணத் தாரடியே
னஞ்சடங் காதரித்தா ரார்வு. (கூ0)

ஒண்டொடியார் சொன்னுசப்பு மொண்பூ சகர்கரனுங்
கண்டை யமருஞ்சீ காழியே—மண்டுமெரி
யாவாரங் கையா ரனலாரென் பார்சூழார்
மாவாரங் கையார் மனை. (கூக)

நன்மங் கையர்தனமு நான்மறையோர் மேன்மகமுங்
கன்மங் கவருஞ்சீ காழியே—தன்மனைகைப்
பற்ரு வரஞர் பயில்பெரும ணம்புகுந்தார்
வற்ரு வரஞர் மனை. (கூஉ)

வட்கார்மேல் வீரர்களு மாதிரநீள் வீதிகளுங்
கட்கங்கை யாரவுறுங் காழிய்யே—பட்காதல்
வாக்கை நவின்ருர் மணத்துற்ருர்க் கவ்வாக்காற்
றிக்கை நவின்ருர் செறிவு. (கூங)

செவ்விநிரை யுங்கவியுந் தேருமறை யோருமிலங்
கவ்வியம கங்காட்டுங் காழியே—செவ்வொளியுண்
மேய மணஞ்செறிந்தார் மேவுகென்று சேர்த்தாரென்
மாய மணஞ்செறிந்தார் வாழ்வு. (கூச)

தோமில்சிவ வேதியருந் தூக்கியுணர் தார்க்கிகருங்
காமிகமுன் வாதுளங்தேர் காழியே—யேமணத்தில்

வந்தாரெல் லாருமத்தர் மாணடிசேர் வாழ்வருளாற்
றந்தாரெல் லாருமத்தர் சார்பு. (கூரு)

பூவளிக்குங் காவலர்தம் பொன்மனேயும் பன்மரனுங்
காவலர னஞ்சாருங் காழியே—மேவுதந்தை
முன்ன வளித்தார் முருகர்நக்கர் பாணரொளித்
துன்ன வளித்தார் தொடர்பு. (கூசா)

மானுரு மன்னர்கண் மாக்குழலு மாக்குலமுங்
கானுறு முல்லையமர் காழியே—யானமுத
லாற்றும் பதத்தா ரளவில்ரைச் சோதிபுக
வேற்றும் பதத்தா ரிடம். (கூஎ)

எண்ணரச ரும்மகவு மேந்துமலர்ப் பூந்தருவுங்
கண்ணனையை மேவுஞ்சீ காழியே—யண்ணலரு
ணேக்கி யமர்ந்தார்முன் னேற்றங்கச் சோதிபுகப்
போக்கி யமர்ந்தார் புரம். (கூஅ)

ஆதரத்தி னூற்முர்பா லாரியரு நேரியருங்
காதரத்தை யாற்றுஞ்சீ காழியே—காதலியைக்
கைப்பிடித்தார் மைந்தனூர் காணொளிக்கு ளூர்முன்று
வைப்பிடித்தார் மைந்தனூர் வாழ்வு. (கூகூ)

ஆளுமங்க ணூரருளே யாயிழையார் வாயுரையைக்
காளகண்ட னுடஞ்சீ காழியே—தாளிறைஞ்சென்
சம்பந்த வள்ள றயிர்க்குந் திருஞான
சம்பந்த வள்ள றலம். (எ)

ஸ்ரீஞானசம்பந்த லீலாசங்கிரகச்

சிலேடைவெண்பா.

முற்றிற்று.

சிவமயம்.

# தில்லைச்சிலேடை வெண்பா.

## காப்பு.

பூமாதர் வாழ்தில்லைப் புத்தேட் கிருபொருள்வெண்
பாமாலை சூட்டும் பணியருளுஞ்—சோமேலைப்
பொற்பகத்தின் செய்கோ புரவாயி லாம்பன்முகக்
கற்பகதகின் செய்ய கழல்.

## நூல்.

பூவாரும் பண்ணவரும் போதவரு மாதவருந்
தேவாரம் போற்றுஞ்சீர்த் தில்லையே—தாவாதங்
காடகத்த னாடகத்தன் பாளரிரு வோர்க்குமன்றி
னாடகத்த னாடகத்த னார்வு. (க)

வில்லம் பலநடமு மீதுயரு மூதெயிலுஞ்
செல்லம் புலியமருந் தில்லையே—சொல்லிலிங்கத்
தாவா கனத்தன் பகத்தார ருச்சனைசெ
யாவா கனத்த னகம். (உ)

மன்னும் பணியருஞ்சேல் வாவியெழும் வாவிகளுந்
தென்னம் பலம்வீழுந் தில்லையே—மின்னிலைவேற்
சேய்மதலை யம்புயத்தான் சேமம் விடப்பணித்தான்
சேய்மதலை யம்புயத்தான் சேர்வு. (௩)

காதும் புறத்தகத்த காரிருளுங் காளையருஞ்
சேதம் பலமடக்குந் தில்லையே—வேதந்
தருவாயான் மாதிடத்தான் றண்கயிலை யாலந்
தருவாயர்ன் மாதிடத்தான் சார்பு. (ச)

மாகம் படுக்குமன்றில் வந்வரும் பைந்தடியுந்
தேகங் கடக்குஞ்சீர்த் தில்லையே—மாகந்

தரமலையுங் கந்தரத்தன் ருனவர்கோ னுள்சோர்
தரமலையுங் கந்தரத்தன் சார்பு. (௫)

கற்பார் தபதியருங் காரார் விதரணருஞ்
சிற்ப மறப்புரியுந் தில்லையே—யற்பமரு
முள்ளம் பரத்தா ருழுவையரி போற்றாட
முள்ளம் பரத்தா ருழை. (௬)

நன்கலைக்கல் லூரிகளு நாரியர்மைத் தாரைகளுந்
தென்கலைமா னம்பரிக்குந் தில்லையே—தன்கயிலை
யேயா னடத்தினு னெண்ணுதார் கண்ணார
வேயா னடத்தினு னில். (௭)

நந்தூ ரகழிகளு நன்னுதலார் வின்னுதலுஞ்
சிந்தூர மங்காட்டுந் தில்லையே—யிந்தூருங்
கோடீரத் தானமர்வான் கூத்தனடி யேனுளத்துங்
கோடீரத் தானமர்வான் கோயில். (௮)

சீர்த்தடஞ்சேர் மாதவருஞ் செய்யவன்னார் மெய்புளமுந்
தீர்த்தம் படிந்தேறுந் தில்லையே—போர்த்திகிரி
கோபால னத்தனுர் கூர்ந்திறைஞ்ச நேர்ந்தருளுங்
கோபால னத்தனுர் கோயில் (௯)

பாராள் முடிவேந்தும் பாதலமு மீதலமுஞ்
சேராரை யங்கட்டுந் தில்லையே—நேரார்முன்
மாகனகக் கார்முகந்தான் வாங்கினு னேங்குமுடி
மாகனகக் கார்முகந்தான் வாழ்வு. (௰)

மாசகலான் றேருளமு மாணவர்த மாணவமுந்
தேசிகனே யங்கடக்குந் தில்லையே—பூசை
யனைய விதம்புரிந்தா ளுதரிப்பா னென்பா
லனைய விதம்புரிந்தா னூர்வு. (௧௧)

ஓதான் குளப்படிநீ ரும்மடவார் தம்மிதழுஞ்
சேதாம் பலங்கொடுக்குந் தில்லையே—வேதாந்த
மோதரியான் றந்திரத்தா னுய்த்துணர்ந்தார்க் கின்னலுற
வோதரியான் றந்திரத்தா னூர் (௧௨)

பூம்பொழிலும் வாங்கவியும் போரயரும் வீரர்களுந்
தேம்பலா வின்பலமார் தில்லையே—நாம்பிரம
மென்பார்க்கு மாகத்த னென்றுதன தொன்றுணர்த்தா
னென்பார்க்கு மாகத்த னில். (கங)

அவ்வியமற் றூர்மலத்தை யையருமன் ஞர்தொழிலுஞ்
செவ்விதியங் காதரிக்குந் தில்லையே—நவ்வியம
ரங்கரத்த ராஞ ரலகிலிமை யோரென்பா
ரங்கரத்த ராஞ ரகம். (கச)

உத்தாந்தண் சைவநெறி யுண்மையருந் திண்மையருஞ்
சித்தாந்தஞ் செய்யுஞ்சீர்த் தில்லையே—முத்தாந்
தரங்கத் தரணியார் தானத்தார் போற்றந்
தரங்கத் தரணியார் சார்பு. (கரு)

வாரங் கழனிகளு மாண்கிடையும் பாண்டில்களுஞ்
சேரங் குரம்படருந் தில்லையே—சாரங்க
மேவங் கரனூர் விழிதரநல் லாழிதந்து
மேவங் கரனூர் விழைவு. (கசா)

மீக்குரவர் பாற்பலரும் வேதியரில் வேதிகளுந்
தீக்கை யினிதமரூஉந் தில்லையே—தூக்குகுழைக்
காதார நாகத்தார்க் கத்தரிமை யோர்க்கரனுக்
காதார நாகத்தார் காப்பு. (கஎ)

மாமரைக ளாவியினு மங்கையர்கள் கொங்கையினுந்
தேமல் கனங்காட்டுந் தில்லையே—காமன்
புரமாய்த்த வம்பகத்தன் போர்கிரும்ப னூறு
புரமாய்த்த வம்பகத்தன் பொற்பு. (கஅ)

சேரங்கத் தண்ணுமையுஞ் செங்கமலக் கொங்கலருஞ்
சீரங்க னாதரிக்குந் தில்லையே—நாரங்கொள்
கையரா வாட்டினர் காதலித்தார் பான்மலமாங்
கையரா வாட்டினர் காப்பு. (ககூ)

வீணையிசைப் பாரகமு மெல்லியரும் பல்கலையுஞ்
சேணி யரங்கடுக்குந் தில்லையே—வேணியின்க

ணோதம் படுத்தார்சி வோகமுற்றந் நாட்கிதை
யோதம் படுத்தா ருழை. (உ௰)

மீக்கனக மாப்பொதுவும் வீக்கமழு நீர்க்கயமுந்
தேக்கமல மாக்களமர் தில்லையே—நோக்கெரியிற்
காமருட லம்படுத்தான் காணிதழி வேணியின்கட்
காமருட லம்படுத்தான் காப்பு. (உக)

ஓர்த்துணர்ந்த மோனருமங் கோவலற மேவினருஞ்
சேத்திரவா சஞ்செய்யுந் தில்லையே—காத்திரஞ்சே
ரங்கனையா னங்கனையா' னங்கையிஞ னுகஞ்சா
ரங்கனையா னங்கனையா னூர்வு. (உஉ)

ஆரச்சி வோகமுற்ரு ரான்மாவு மான்மாவுந்
தீரத் துவமகலுந் தில்லையே—பேரத்
தருவா ணகத்தார் தமக்கா ரமுதந்
தருவா னகத்தார் தலம். (உங)

காவலர்த மாவரணுங் காட்டுமெழிற் பேட்டனமுஞ்
சேவ லமருஞ்சீர்த் தில்லையே—யாவுந்
தருமம்பை யாரத்தன் றன்னடைந்தார்க் கின்பீ
தருமம்பை யாரத்தன் சார்பு. (உச)

மிக்கோர்கள் புன்மதத்தை விற்செறியுஞ் சிற்சபையைத்
திக்காரங் கண்டிவருந் தில்லையே—யக்கார
மென்னவந்த ணித்தா னிதயத்தான் ஞேர்க்கிரங்கி
யென்னவந்த ணித்தா னிடம். (உரு)

நவ்விவிழி யார்மொழியு நண்ணினர்க்குப் பண்ணவருஞ்
செவ்வழியங் காட்டுஞ்சீர்த் தில்லையே—வௌவியவென்
கோதரங்கன் மாதரங்கண் கூர்ந்தொழித்தான் வார்ந்தசடைக்
கோதரங்கன் மாதரங்கன் கோயில். (உசு)

மாலையங்கு மாளிகையு மங்கையர்க டங்கண்ணுஞ்
சேலையங்கொ டித்திகழுந் தில்லையே—பாலம்
வருமம்ப கத்தன் வயங்கெழுபுள் ளேற்றி
வருமம்ப கத்தன் மனை. (உஎ

மாவழங்கு கானகத்து மாகமுந்து கோபுரத்துந்
தீவகங்க ணேயமுறுந் தில்லையே—மேவுமங்கு
கையா னகத்தன் கருதார்ப் பொடித்தவிலங்
கையா னகத்தன் களம். (உஅ)

சீராரு நூலுணர்த்துந் தேசிகருங் காவலருஞ்
சேராரை யங்கலைக்குந் தில்லையே—நேராம்
வினையா ருளத்தர் விரிந்துமுற்று முட்கொள்
வினையா ருளத்தர் விழைவு. (உகூ)

மாசபையும் வாவிகளு மாதவரும் வான்புகழுந்
தேச மடுக்குஞ்சீர்த் தில்லையே—பேசுமறை
வன்னித் திருக்கரனார் மாதிடத்தா ரோதுநுதல்
வன்னித் திருக்கரனார் வாழ்வு. (௩0)

நங்கையருங் கேவணத்தி னண்ணுகொல்ல ரும்மறுகுஞ்
செங்கற் படுக்குஞ்சீர்த் தில்லையே—செங்கையமர்
தங்கனக வில்லார் சகமொடுங்கு நாளோங்கித்
தங்கனக வில்லார் தலம். (௩க)

நேராரும் போதகரு நீளுமணி மாளிகையுந்
தேராத வற்படுக்குந் தில்லையே—சீராரும்
பொற்பணிய நாகத்தார் போந்திரைஞ்ச வார்ந்தநஞ்சர்
பொற்பணிய நாகத்தார் பொற்பு. (௩உ)

பையார் சிமுர்களத்தும் பற்பலவா யாலைடத்துஞ்
செய்யா வரணஞ்சேர் தில்லையே—மொய்யார்சங்
கங்கையார் தங்கையார் காதரத்தார் மாதரத்தார்
கங்கையார் தங்கையார் காப்பு. [௩௩]

மாதகைய சேதிமமும் வாவிகளுங் காவகமுஞ்
சீதமுற வாகமஞ்சார் தில்லையே—பாதமுடி
யஞ்சனத்தன் காண்பரியா னந்தமிட றுந்துமறை
யஞ்சனத்தன் காண்பரியா னூர்வு. [௩௪]

மாவகலக் காவலரு மாதளியிற் கேதனமுஞ்
சேவகமுற் றுடலுறுந் தில்லையே— பாவகனிற்

தாதவனங் கண்ணு னகங்கனியார்க் கின்பமரு
ள்ளாதவனங் கண்ணு னகம். [௩௫]

மன்னரச ரொண்புயமும் வாளமர்கைக் காளையருந்
தின்னகத்தி னுடலமர் தில்லையே—பண்ணகத்த
மானத்தி ராவிடத்தான் மாண்மிடற்றின் வானமுண்ணு
மானத்தி ராவிடத்தான் வாழ்வு. [௩௬]

கொங்கார்ந்த வாவியும்வெண் கொற்றக் குடைவேந்துஞ்
சிங்கா தனமடுக்குந் தில்லையே—சங்கார்
கரத்தனய னத்தன் கதிர்சோமன் செந்தீக்
கரத்தனய னததன் களம். [௩௭]

நீங்கா திமையோரு நீடருவிற் பாடலியுந்
தேங்கா தரமடுக்குந் தில்லையே—வாங்கியவி
லோதியம ரக்கரத்தா னோதியர்மூன் றோடிரண்டென்
றோதியம ரக்கரத்தா னூர். [௩௮]

தாரகத்தா ரம்பலமுந் தார்ப்பரத ரேர்ப்புயமுஞ்
சீரகத்தார் மேவுஞ்சீர்த் தில்லையே—யேரகத்தான்
றாய வலஞ்சுழியான் றாதைகளத் தாவியெங்குந்
தாய வலஞ்சுழியான் சார்பு. [௩௯]

புக்கின்ப மாநடமும் பூக்கமழுங் காக்களுமண்
டிக்கந்த ரம்பரவுந் தில்லையே—மிக்கவுடை
யாசையா னுசையா னுரா தருள்புரியு
மாசையா னுசையா னூர்வு. [௪0]

தத்தொந் தருநடமுந் தங்கமலப் புங்கவருஞ்
சித்தம் பரம்புரியுந் தில்லையே—வித்தம்பூ
மாதவத்தை யாதரித்தான் மச்செயனீத் தாரியற்று
மாதவத்தை யாதரித்தான் வாழ்வு. [௪௧]

முற்றியநீர்ப் பொற்றசும்பு முல்லையமர் கொல்லைகளுந்
தெற்றியம ராவுந்துந் தில்லையே—பொற்றொடியா
ரங்கத்த னங்கத்த னுச்சென் றிறைஞ்சமர
ரங்கத்த னங்கத்த னூர்வு. [௪௨]

பம்புமொளி யம்பலமும் பந்தருமுன் றந்தையார்
செம்பியன்மாட் டங்கடுக்குந் தில்லையே—நம்புவட
பாதவத்தன் மாதவத்தன் பாளர்சென்னி யிறட்டிக்கும்
பாதவத்தன் மாதவத்தன் பற்று. [சங]

தங்கியசார்த் தூலபதர் தம்மகமுந் தாபதருஞ்
சிங்கவனம னங்கடுக்குந் தில்லையே—மங்கையொரு
பாகத்த வாகத்தன் பாகத்தர் போற்றுமருட்
பாகத்த வாகத்தன் பற்று. [சச]

ஒன்றுதுணை வர்ப்பிரியல் லோதியரு மோதியருந்
தென்றலையா னைக்கடுக்குந் தில்லையே—புன்றலைய
பூதப் படையான் புகன்மூ விலைவடிவப்
பூதப் படையான் புரம். [சரு]

மாவலங்க லம்புயத்து மைந்தருமன் னூர்நடையுஞ்
சேவலங்க ணாட்டுஞ்சீர்த் தில்லையே— மேவுசக
காரணத்த னாரணத்தன் கட்பதத்தன் பொற்சடைக்கட்
காரணத்த னாரணத்தன் காப்பு. [சசு]

புண்ணியத்தொண் டாற்றுநரும் பொற்பணிசெய் சிற்பர்களுந்
திண்ணகக்கை யாலாற்றுந் தில்லையே—தண்ணிதழித்
தாரகத்த னேரகத்தன் றன்மடியுற் றோதியமெய்த்
தாரகத்த னேரகத்தன் சார்பு. [சஎ]

பம்பியபோர் வீரர்களும் பண்புறுதொண் டன்பர்களுஞ்
செம்புலமே விப்புரியுந் தில்லையே—யம்பவள
வண்ணத்தா னத்தன் வயங்கும் பதாகையமர்
வண்ணத்தா னத்தன் மனை. [சஅ]

வின்மைந்தர் தோளுமன்றின் மேவினர்க்குச் சார்வினையுஞ்
சென்மந் தரமலைக்குந் தில்லையே—வன்மஞ்செ
யுண்மா தடுத்தா ருழுவலன்பர்க் கோர்மேனி
யுண்மா தடுத்தா ருழை. [சகூ]

எவ்வங்கொள் காமுகர்பா லின்மதனு நந்தனமுஞ்
செவ்வந்திப் போதடுக்குந் தில்லையே—பௌவஞ்சேர்

மாவிடத்தார் கந்தரத்தர் மன்னிமயத் தன்னையமர்
மாவிடத்தார் கந்தரத்தர் வாழ்வு. [௫௰]

ஏரத்த வானிரையுங் கேதமறு மாதவருந்
தீரத்த வம்பயிலுந் தில்லையே—யீரத்த
வானம் பரித்தார் மதிமுடியார் நஞ்சருந்தி
வானம் பரித்தார் மனை. [௫௧]

அம்மடவா ரம்மமுழ னாயர்களு மாய்பொழிலுஞ்
செம்மலையா ரம்மடுக்குந் தில்லையே—மும்மலமும்
போகத்தான் போற்றும் புனிதர்க் கினிதருண்மெய்ப்
போகத்தான் போற்றும் புரம். [௫௨]

ஓராயர் தோழங்க ளும்பொழிலு மம்பலமுஞ்
சீராக மஞ்சாருந் தில்லையே—யேரார்
திருநட்ட மாடினான் சேரார் புரம்பி
திருநட்ட மாடினான் சேர்வு. [௫௩]

ஓதியமெய்த் தொண்டிடத்து மொண்மா ணவரகத்துஞ்
சேதிமத்த ரற்படுக்குந் தில்லையே—மூதிமய
மங்கையமர் வாமத்தன் வாங்கியவிற் பொன்னோதி
மங்கையமர் வாமத்தன் வாழ்வு. [௫௪]

பொங்குசித்தர் மார்பகமும் போரயரும் வீரர்களுஞ்
சிங்கநா தம்படுக்குந் தில்லையே—கங்கைநதி
வேணியான் பாணியான் வேட்டார்க் கருண்ஞான
வேணியான் பாணியான் வீடு. [௫௫]

ஒள்ளிழையார் சொல்விழியு மோதுமனை பான்மகவுந்
தெள்விளியா லங்கடுக்குந் தில்லையே—கள்ளிதழித்
தாரான் றரப்பணியான் றன்னடைந்தார்க் கின்னருளைத்
தாரான் றரப்பணியான் சார்பு. [௫௬]

கந்தமலர்ச் சோலைகளுங் கற்குநருஞ் சற்குருவுஞ்
சிந்தனைய வங்கடக்குந் தில்லையே—முந்துமறை
யீசான சத்தத்த னென்றோ துபதியன்பர்க்
கீசான சத்தத்த னில். [௫௭]

பம்புமடி யார்மலத்தைப் பாற்றுநரும் வீக்கலருஞ்
செம்பிரச முண்டெனச்செய் தில்லையே—நம்பு
மறைப்பரிய வாகனத்தன் மாண்டமனத் தாருண்
மறைப்பரிய வாகனத்தன் வாழ்வு. (ருஅ)

விற்புருவத் தார்தனமு மேவியநூற் காவியருஞ்
செப்பங் கடுக்குஞ்சீர்த் தில்லையே—யப்பமருஞ்
சேகரனூர் மாகரனூர் தீர்ந்தவிவேண் டப்படர்செய்
சேகரனூர் மாகரனூர் சேர்வு. (ருசு)

கவ்வை யகல்பணியுங் காரிகையார் சீர்நடமுஞ்
செவ்வி யரங்காற்றுந் தில்லையே—நவ்விமழு
வாளக் கரத்தார் மறைக்குளுயி ராமைந்து
வாளக் கரத்தார் மனை. (சுய)

போமங்க ணுதலரும் பூவரசா லேவர்களுஞ்
சேமங் கடவாத தில்லையே—வாமஞ்சார்
மாதரார் காதரவன் வந்திப்பார்க் காதரவன்
மாதரார் காதரவன் வாழ்வு. (சுக)

உந்தாயர் மாலையினு மோவாம லோளியினுஞ்
சிந்தாத்தந் தாவளஞ்சார் தில்லையே—மைந்தா
ரிலங்கையனை யப்படுத்தா னில்லம்பே ருக்கொண்
டிலங்கையனை யப்படுத்தா னில். (சுஉ)

பொன்னம் பலத்துமங்குப் போந்தவரன் பேந்தகத்துஞ்
சின்னம் படுக்குஞ்சீர்த் தில்லையே—சென்னிப்
படர்நீத்த வம்புலியான் பண்டுதக்க னூற்றேய்
படர்நீத்த வம்புலியான் பற்று.
(சுங)

பூணாந் துரங்கம் புனைவோரும் பொற்கொடியுஞ்
சேணங் தரமார்க்குந் தில்லையே—காணந்தோய்
பூதரமாங் கோதண்டன் பொன்றுமலங் குன்றுபல
பூதரமாங் கோதண்டன் பொற்பு. (சுச)

சற்றெயிலிற் சூழ்பொறியுஞ் சூட்டனமார் கோட்டகமுஞ்
செற்றலனா யங்காட்டுந் தில்லையே—முற்றுணர்ந்தார்

காதரனார் நீதரனார் காணார்கா ணார்முழுதுங்
காதரனார் நீதரனார் காப்பு. (சுரு)

பாகமுனி வோர்கையும் பைங்கொடியா ரங்கையுஞ்
சீகரமங் காட்டுஞ்சீர்த் தில்லையே—தேகமிள
மையுடனி லாவென்றார் மாண்மனத்தார் காண்விழிசெம்
மையுடனி லாவென்றார் வாழ்வு. (சுசு)

மானம் பறந்தலையு மானார்கண் கந்தரமுஞ்
சேனந் தலைச்சேர்க்குந் தில்லையே—யானந்த
தாண்டவத்தை யாற்றுவான் றண்ணருளா னன்னெறியான்
றாண்டவத்தை யாற்றுவான் சார்பு. (சுஎ)

அல்வென்ற மாடமுமல் லாநெறியிற் காவலருஞ்
செல்வந் தடுக்குஞ்சீர்த் தில்லையே—வில்வ
முறுசே கரனா ருவனத் துசங்கை
யுறுசே கரனா ருழை. (சுஅ)

தம்பரத மாநடமுந் தாவில்பல மாளிகையுஞ்
செம்பொன்னி னம்பலஞ்சேர் தில்லையே—யும்பரச்சத்
தாலந் தரித்தா ரலறவருள் கூர்ந்துகண்டத்
தாலந் தரித்தா ரகம். (சுகூ)

தெவ்வாண்மை சிந்தரசர் செல்வர்களுஞ் செல்வர்களுஞ்
செவ்வேளாண் மையமருந் தில்லையே—யொவ்வாப்
பரசமயக் கோளரியார் பண்பெறுகற் றூக்குப்
பரசமயக் கோளரியார் பற்று. (எ0)

யோகாங்க ணூற்றுநரு மும்பரம ரம்பலமுந்
தேகாந்தி யங்கெடுக்குந் தில்லையே—சீகாழிச்
சம்பந்த ரத்தர் தளர்ந்தரிபின் றேர்ந்தேத்துஞ்
சம்பந்த ரத்தர் தலம். (எக)

நேசஞ்செய் மாதவரு நீடுபொருட் பீடிகையுந்
தேசம்பலமருவுந் தில்லையே—பேசுமிள
மைந்தனஞ் சம்பந்தன் வாக்கமுதுண் டான்மிடற்ற
மைந்தனஞ் சம்பந்தன் வாழ்வு. (எஉ)

ஓதங் கழனியிற்றே னும்பரதர் தம்பொருளுஞ்
சேதங் கடக்குஞ்சீர்த் தில்லையே—மேதையுழ
வாரப் படையத்தர் வாகீசர் வாழ்த்துமுடி
வாரப் படையத்தர் வாழ்வு. (எ௩)

உந்தா ரிசைக்கிடையு முற்றவர்பா னற்றவருஞ்
சிந்தா குலமாற்றுந் தில்லையே—மைந்தார்கல்
லேமதலை யாகத்தன் னெய்தினர்க்கான் சூற்பொறித்தா
னேமதலை யாகத்த னில். (எச)

மாகமருங் காவகமும் வாகமரு மாகவமுஞ்
சேகரங்க ளூற்றுஞ்சீர்த் தில்லையே—சாகரஞ்சார்
மைக்கடுக்கை யாரத்தான் வாங்கினர்க்குச் சந்துசென்மா
மைக்கடுக்கை யாரத்தான் வாழ்வு. (எரு)

தூவனத்த வாவிகளுந் தொய்யின்முலைத் தையலருஞ்
சீவனமுற் றேயுஞ்சீர்த் தில்லையே—நாவலூர்
வேதியனங் கற்படுத்தான் மெய்ந்நெறிச்செல் லாதுலகை
வேதியனங் கற்படுத்தான் வீடு. (எசு)

வெளவா ரலர்த்தடமும் வைகறைய மெய்கிடையுஞ்
செவ்வா ரணத்திசையார் தில்லையே—யவ்வாத
வூரானை வீட்டினு ரும்பரச முன்பதித்தா
ரூரானை வீட்டினு ரூர். (எஎ)

சேயம் புயையனையார் சிற்றிடையு முற்றகமுஞ்
சீயங் கடக்குஞ்சீர்த் தில்லையே—மேயவன்பர்
பாடுதிரு வாசகத்தர் பைங்கொன்றை யந்தாது
பாடுதிரு வாசகத்தர் பற்று. (எஅ)

மாகா முகரிடமும் வாவியும்பண் பாடெருஞ்
சீகா மரம்பாடுந் தில்லையே—வாகா
ரியற்பகையார் பாலேற்ற ரோந்திழையைப் போந்தென்
னியற்பகையார் பாலேற்ற ரில். (எகூ)

பூவையனைம் பாலும் புறவடியு மெல்லியலுஞ்
சீவதமே யாருஞ்சீர்த் தில்லையே—கோவணநே

ராத்தரா சேறுடையார்க் காங்கதுவே பாங்கமைத்தா
ராத்தரா சேறுடையா ரார்வு. (அம)

உக்துபொழி லின்கனிரு லுந்தகைய மைந்தர்களுஞ்
செந்தினக ரன்புரையுந் தில்லையே—சந்தப்
பணியாற்று மூர்த்தியார்ப் பார்புரக்க வேவும்
பணியாற்று மூர்த்தியார் பற்று. (அக)

பேர்ரா டவர்மார்பும் பூந்தடமும் பல்பொருளுஞ்
சீரா வணந்தேங்குந் தில்லையே—யாராத
காதலங்கண் ணப்பனார் கான்றவமு துண்டாரொன்
காதலங்கண் ணப்பனார் காப்பு. (அஉ)

கொங்கார்கான் வேட்வெருங் கோமறுகிற் காளையருஞ்
சிங்கார மாகவருந் தில்லையே—வங்கியக்கை
யானைய னரிசையா ரஞ்செவியார் மஞ்சனமா
லானைய னரிசையா ரார்வு. (அங)

தையலர்க டங்களனுஞ் சங்கீதர் தங்களனுஞ்
செய்யகாந் தாரமுறுந் தில்லையே—மெய்யுணர்ந்தா
ரம்மையா ரம்மிடற்று ரற்புதவந் தாதியா
ரம்மையா ரம்மிடற்று ரார்வு. (அச)

ஏருற்ற மஞ்சனமு மெய்ம்மறையோ ரும்மானிச்
சீருத் திரமாடுந் தில்லையே—யோருமப்பர்க்
காமருமப் பூதியார் கண்ணுவந்தா ரெண்ணினரைக்
காமருமப் பூதியார் காப்பு. (அரு)

ஆரியபொன் வண்ணத்தந் தாதியுந்தா ரன்பர்களுஞ்
சேரலர்மா ரானவிற்றுந் தில்லையே—மாரனுட
னீருக்கு மம்பகத்த னீருக்கப் போந்தவிட
நீருக்கு மம்பகத்த னேர்வு. (அசு)

பையதுணைச் சேவல்களும் பாவலர்க ளுவகமுஞ்
செய்யுண் மணமேவுந் தில்லையே—மெய்யன்
புடையார் கணம்புலனு ரொண்டிறல்கண் டீபன்
புடையார் கணம்புலனு ரூர். (அஎ)

நாரணிளங் கோக்களுமு னற்றுதிசெய் விப்பிருஞ்
சீரணவுத் தாரணஞ்செய் தில்லையே—பேரமைச்சர்
மங்கையர்க ளுயகியார் வாழ்த்தவழித் தாரமண்ட
மங்கையர்க ளுயகியார் வாழ்வு. (அ௮)

தூக்குலகெ லாமுதலுந் தூயோர் பரத்துவமுஞ்
சேக்கிழார்க் கென்றோதுந் தில்லையே—சாக்கியனார்
கற்றூர் மனம்புரத்தார் காசறுமெய் கண்டமுன்னால்
கற்றூர் மனம்புரத்தார் காப்பு. (அ௯)

நாவையர்சீர்த் தொண்டர்புரா ணஞ்சொலற்குந் தஞ்சுறற்குஞ்
சேவையர்கோ மான்மேவுந் தில்லையே—மேவை
யரியமருந் தாண்டவத்த ருய்ந்தமைந்தா ராரு
மரியமருந் தாண்டவத்த ருர்வு. (௯௰)

நாறு மிணர்ப்பொழிலு நன்னெறிக்கட் டுன்னினருந்
தேறன் மலரகஞ்சார் தில்லையே—யாறுமதி
சென்னிக் கிசைத்தார்முன் சேக்கிழார் பாற்கருணை
சென்னிக் கிசைத்தார் செறிவு. (௯க)

தையலர்கண் மொய்ம்முலையுந் தாம்பலமீன் வாம்பணையுஞ்
செய்யகலங் காட்டுஞ்சீர்த் தில்லையே—துய்யவெண்ணெய்
மெய்கண்ட தேசிகனார் மெய்ப்போதத் தாரருளான்
மெய்கண்ட தேசிகனா வீடு. [௯உ]

மேதகைய மாதவரு மேவுமவர் பாவுளமுஞ்
சேத னமன்பணிகொ டில்லையே—மேதை
யருணந் திவளத்தன் ருசாற்சார்ந் தோர்மெய்
யருணந் திவளத்த ருர்வு. (௯௩)

கூர்ந்தமு வாயிரர்தீக் குண்டமுநன் மைந்தர்களுஞ்
சேந்த னலங்கெழுஞ்சீர்த் தில்லையே—வார்ந்தசெவி
வாய மனத்தார் மறைஞான சம்பந்தர்
வாய மனத்தார் மனை. [௯௪]

மேவினர்பாற் போதகரு மேதவினை வேதிகளுந்
தீவினையங் காட்டுஞ்சீர்த் தில்லையே—மேவுமுடி

யுள்ள முகந்தா ருமாபதியார் பூசனைகொண்
டுள்ள முகந்தா ருழை. [௬௫]

ஆரியத போவனமு மாவனமு மோனருமாற்
சீரை யரைச்சேர்க்குந் தில்லையே—நாரைநம்பி
யாண்டார்பண் பாடலா ரன்புளத்தார்க் கின்புருவா
யாண்டார்பண் பாடலா ரார்வு. [௬௬]

மீகுலவுஞ் சோலைகளு மின்னுமுடி மன்னவருஞ்
சீகரமங் கண்மேவுந் தில்லையே—வாகமர்சு
வேதவன நாமத்தார் மேவுமக வாயுணர்த்தார்
வேதவன நாமத்தார் வீடு. [௬௭]

திவ்விய நூல் வேதியருந் தேவலரும் பாவலருஞ்
செவ்வியம கம்மாற்றுந் தில்லையே—வெவ்வியகா
கோதரத்த வேணியான் கோட்டிமயத் தாய்நீலக்
கோதரத்த வேணியான் கோயில். [௬௮]

வானுறு போம்பொழிலு மல்குமல ரல்விகளுந்
தேனுறு கால்பாயுந் தில்லையே—யானுறு
கேதனத்தன் போதனத்தன் கேதனத்தப் போதுபொன்னி
கேதனத்தன் போதனத்தன் கேள். [௬௯]

துங்கமுலை யார்கைச் சுகமு மகவினமுஞ்
செங்கீரை யாடுஞ்சீர்த் தில்லையே—யங்க
ணிமையவரை யாளிடத்தா ரேத்தியடி போற்று
மிமையவரை யாளிடத்தாரில். [௭௰]

தில்லைச்சிலேடைவெண்பா.

முற்றிற்று.

உ

சிவமயம்.

# திருவாரூரந்தாதி.

காப்பு.

திருவர மாலரி போற்றுந் தியாகரச் சேண்கிளர்கந்
தருவர மாவிசை கூர்கம லேசரந் தாதிமுற்றப்
பெருவர மாமலை யாற்றிட்ட பொன்முனிற் பீடுபெற்றுக்
குருவர மாற்றுரைத் தான்மணாத் தாளையுட் கொள்ளுவனே.

நூல்.

திருமங்கை யாரகந் தேர்ந்தருச் சிக்கத் திருவருண்மு
திருமங்கை யாரக லன்பிற் கிரங்கித் திகழுநந்த
திருமங்கை யாரக லாவிதந் தாண்டவன் றேங்கொன்றைக்க
திருமங்கை யார கமலேசர் பூங்கழல் சிந்திப்பனே. (௧)

சிந்திக்க வந்தனை செய்யக் கருத்துட றென்கமலை
யுந்திக்க வந்தனை யட்டானைக் கேணெஞ் சுவனருளே
நந்திக்க வந்தனை வாணாளுக் காக்கி நலியலுயிர்
சிந்திக்க வந்தனை செய்காலன் சேய்மையுஞ் சேரலனே. (௨)

சேரல னுவலர் கோனும் பரவுந் தியாகனருள்
சேரல னுவலங் கார்கம லேசன் றிருமிடற்றிற்
கூரல னுவலங் குங்கே தனனருள் கூடலர்பாற்
கூரல னுவலர் சொற்று ரகத்தனைக் கூறுதுமே. (௩)

கூறு வரித்தனந் தின்வினை யாவுங் கொடியையொரு
கூறு வரித்தனந் திக்குள நாமங்கள் கூடுமெல
மாறு வரித்தனந் திக்கெட நோக்கினர் வண்கமலை
யேறு வரித்தனந் திண்மற லோர்தியிங் கேகலையே. (௪)

எகலை யாக மலைக்குளெம் மான்பத மேத்தலைமெய்
மாகலை யாகமம் மோர்ந்தார்க் கிடைத்திலை மங்கையங்கை

மாகலை யாகமன் றுள்சேர்ந் திலாது மறல்கையுற்றுச்
சாகலை யாகம வாழ்வா மதித்தியென் றன்னெஞ்சமே. (௫)

தன்னந் தனித்தவ னென்றெனைப் பூசையிற் றங்கியருள்
பொன்னந் தனித்தவ னுயக மற்கடப் புந்தியில்லாக்
கொன்னந்த னித்தவ மார்க்கர்குற் றேவலுங் கொண்டிலனின்
முன்னந்த னித்த வளமார் கமலையின் முன்னவனே. (௬)

முன்னவ னேக மலைப்பதி வேந்த முசுகுந்தர்க்கு
முன்னவ னேக வடிவுட் டெளித்தருண் மூண்டிங்குற்ற
வென்னவ னேகல வாச்செருக் காலெகி னேந்துமய
னென்னவ னேகவின் மேக்குயர்ந் தாயெனை யேன்றுகொள்ளே.

என்றாய் பகவரு வாய்மலை மேற்கிழக் கில்லிழிநோய்
மான்றாய் பகவரு வாதையிற் பின்புறு மங்கையராற்
சான்றாய் பகவரு வாயோர்தி யென்சொற் சரதநின்பா
லூன்றாய் பகவரு வாரூர்த் தியாகனா யுன்பரமே. (அ)

பரமனை யாவணங் கொண்டேகி நாவற் பதிமுதலாச்
சிரமனை யாவண மேவலை யாற்றித் திறமுனக்காந்
தரமனை யாவணங் கென்னு வலியத் தகைந்துகொண்ட
வரமனை யாவணம் மாரூர்த் தியாகனை வாழ்த்துமினே. (௯)

வாழ்த்தா மனத்தவத் தன்னென்று நீக்கின் வரும்பவச்சே
றாழ்த்தா மனத்தவத் தன்வய மாக்கி யலைக்குமதை
வீழ்த்தா மனத்தவத் தண்மதிச் சேகர மேவவரு
டாழ்த்தா மனத்தவத் தன்னுட் கமலையுட் சங்கரனே. (௧0)

சங்கர கங்கா தரவெனைச் சூழ்ந்த சகசத்தபா
சங்கர கங்கா தரஞ்செய்புள் ளூர நடக்கையமர்
சங்கர கங்கா தரகம லேசப தாம்புயநே
சங்கர கங்கா தரக்குழை யாயென்றுந் தந்தருளே. (௧௧)

தந்தா வளத்தம் பரமரி பூண்முற் றரங்கமமு
தந்தா வளத்தலம் வன்மீகங் கற்சுதை தண்ணருளாற்
சிந்தா வளத்த குருத்தரக் கொண்டுந் தியாகனென்றே
சிந்தா வளத்த கமலைப் பிரானையென் செப்புவதே. (௧௨)

செப்ப மருங்குவ மிக்கும் பொருளிலித் தெள்ளமுதம்
வெப்ப மருங்குறை வில்லின்ப வாரிதி மேயதுவோ
வப்ப மருங்குடி லக்கம லேச னருளுருவோ
துப்ப மருங்கு வளைக்கணி யார்த்தெனைத் தோன்றிற்றின்றே.(௧௩)

இன்று வியங்கண் பததா மரையெனக் கீந்திம்பரோ
பொன்று வியங்க ணருந்தவஞ் செய்த புகன்றனவாற்
சென்று வியங்கருத் திற்புரி பாக்கியஞ் சேரப்பெற்றேன்
குன்று வியங்களை யாரூர்த் தியாகர் குளிர்மலைக்கே. (௧௪)

மலைய வனங்கனெய் புண்ணான் மெலிந்தென மாதவமே
மலைய வனங்கம லேசனென் னூர்வலி வாட்டியவின்
மலைய வனங்க ணருள்கூட்ட நின்றநும் மாட்டுவந்தேன்
மலைய வனங்கன் முலையொத் தளித்தெனை வாழ்விக்கவே. (௧௫)

விக்கம் பலவரு மாதவ நின்று மெலிந்துமென்பு
விக்கம் பலவரு மாதவ வாழ்வென விண்ணின்வந்த
கொக்கம் பலவரு மாதவ மோவியர் கொள்கமலை
புக்கம் பலவரு மாதவ ரோலக்கம் போற்றுமினே. (௧௬)

போற்று மருங்க மலையமர் வாரையம் பொன்னிதழி
மேற்று மருங்க மலையமன் போற்றும் விடங்கரைநந்
தோற்று மருங்க மலையமர் பாகரைச் சூழ்வினையே
கூற்று மருங்க மலையமன் னேதனங் கொள்கையன்றே. [௧௭]

கொள்ளப் படுவன சூலக்க ளேவரங் கூர்மப்புற
மெள்ளப் படுவன நஞ்சையங் தோலெலும் பேனக்கொம்பு
வெள்ளப் படுவன வேணிக் கமலை விகிர்தனந்தோ
கள்ளப் படுவனக் கண்ணிநிற் கேதுகொல் காதரமே. (௧௮)

காதரத் தானங்கை சேர்க மலேசற் கருதலர்போன்
மீதரத் தானங்கைத் தேசுடும் பாலையொர் வீரன்பின்னே
போதரத் தானங்கை யோவாற்று மோவென் புரத்தணைத்துக்
காதரத் தானங்கை வேற்கண் டயின்றதுங் கற்பனையே. (௧௯)

கற்பனை யாவையு நீத்தார வீட்டினுங் கண்ணித்தன்சீர்
கற்பனை யாவையு ளத்தானைப் பண்ணைக் கமலைக்குளத்

தற்பனை யாவையு மண்ணலை வாவென் றருட்டில்லைக்கண்
முற்பனை யாவையு டைக்கம லேசனை முன்னுமினே. (உ௰)

மின்னு மலைபுற் புதத்தழி காயமுன் மெய்ம்மையென்றே
யுன்னு மலைபுழன் ருயஞ ரன்றியின் புற்றனையோ
பின்னு மலைபுல் லளறெம்மை யாழ்த்திடும் பேதைநெஞ்சே
சொன்னு மலைபுல்ல மேந்துங் கமலையன் சோத்தங்களே. (உக)

சோத்தந் தருவ ரயனரி யாதியர் சொல்லவன்பிற்
பூத்தந் தருவா மான்மிய மோர்ந்து புரிந்துவட
பாத்தந் தருவர நல்கென் கமலைப் பரமர்க்கன்பா
யேத்தந் தருவரவ் வானந்த வாழ்வெமக் கெப்படியே. (உஉ)

படியாத வம்பட வாணுன்மெய்ந் நூல்கள் படித்தவர்க்குட்
படியாத வம்பட லாங்கார முற்றுப் பலரிகழும்
படியாத வம்பட வந்தோ வுலைந்தனை பற்றுதியிப்
படியாத வம்படர் கட்கம லேசன் பதமனமே. (உங)

மனுவறங் கண்ட திருச்சோழர் வேத மலிதமிழாம்
பனுவறங் கண்டத்திற் பாடும் பெருமக்கள் பான்மகிழ்ந்த்
மனுவறங் கண்ட முழுதாங் கமலை வரதவென்னுண்
மனுவறங் கண்டவொட் டாதருட்டீயின் மலமுளையே. (உச)

மலங்க வருமந்த நின்மல வானந்த வாழ்வகற்றி
மலங்க வருமந்த மெய்ப்போதம் வில்லிட மாய்க்குமது
விலங்க வருமந்த காரங்கொல் பாநுவின் வீட்டியருள்
விலங்க வருமந்த வாரூர்த் தியாகவிவ் வேண்டுவனே. (உரு)

வேண்டா வெருத மனத்தார்க் குரித்ததை மேவலெனின்
மாண்டா வெருத னிரையத் துறிலருண் மாட்சியென்னும்
பூண்டா வெருதவிழ் கொன்றைசெய் யாரூர்ப் புனிதவருண்
மாண்டா வெருத னெனைவாட்டு மூல மலப்பகையே. (உசு)

பகையா வருமங்கை யாறுமொ ராறும் படிமுறையே
தகையா வருமங்கை யாரூர்த் தியாகர் தடஞ்சிலம்ப
தகையா வருமங்கை யாற்பரி சந்தரச் சார்வருண்மா
வுகையா வருமங்கை யாதரப் போதர னூகமன்றே. (உஎ)

ஊகங் கடந்தவ வாதர்செ யன்பருக் குன்னரும்பல்
போகங் கடந்தவ ருட்கம லேசன் புகழுரைத்திங்
கேகங் கடந்தவ ருமுலே யோடிருந் தெற்படநீ
சோகங் கடந்தவ னந்தருஞ் சேறலே தோன்றலின்றே. (உஅ)

தோன்றலே யார வயல்சூழ் கமலேத் தொழுவிடங்கன்
மான்றலே யார வயவேடர் மிச்சிலொர் மாண்மதலே
யூன்றலே யார வயவமு கந்தவற் குள்ளுகந்து
மான்றலே யார வயர்தியென் செய்தியெம் மாணிழையே. [உகூ]

இழைய மருங்குடன் ருவா வருத்த வினைப்பனேமா
ணிழைய மருங்குடக் கொங்கை யளிப்பெய ரேயும்வண்டீர்
ருழைய மருங்குட ஞயவற் ருேடிவ ளோதியுற்றி
ருழைய மருங்குடங் கைக்கம லேசனல் லோதிமத்தே. [௩௰]

ஓதிமஞ் சாரு நடையிடை யோர்வரி தோதுமஞ்சா
ரோதிமஞ் சாரு முலேயிவண் மேனிகண் டேங்குற்றதா
லோதிமஞ் சாரு நிகராத் தலேவருக் கோர்புறங்கா
ரோதிமஞ் சாரு முடிக்கம லேச ருயர்வரைக்கே . [௩க]

வரையா வரும்படங் கைக்கொண்டு போந்தில் வருவனென்ற
வுரையா வரும்புகழ் வாரிவள் சொல்விடை யுண்கட் செயல்
விரையா வருநடை யின்னன திட்டி விளக்கினையே
னரையா வருந்து மருட்கம லேசர் நகத்தண்ணலே. [௩உ]

அண்ணலே யாரூ ரடிகளே நங்கம லாம்பிகைபா
னண்ணலே யாரூர் விடையனே யொண்கொன்றை நாண்மதியந்
தண்ணலே யாரூங் கணிமுடி யானைநந் தஞ்சமென்றே
யெண்ணலே யாரூ றகற்றியிங் காள்வரென் னேழைநெஞ்சே. [௩௩]

ஏழைய ராவி யலேப்பான் புகுந்ததெய் யாதடுத்தாண்
மாழைய ராவிய வேற்கண்ணி யின்பருள் வாயென்றுமெய்
மாழைய ராவிய மார்கம லேச வனேயுங்கொண்டாய்
பீழைய ராவியங் காதலர்க் கேயுநின் பீடென்றே. [௩௪]

நன்றவ னிக்குறத் தானருட் பாப்பெற நச்சித்துப்பிற்
றுன்றவ னிக்குற மூலால சுந்தரற் ருேல்புவிக்கே

கென்றவ னிக்கு வரச்சலமேற்றிக் கமலையிறை
பின்றவ னிக்கு மொழிக்கேவல் செய்துண்மை பேசினனே. [ருடு]

பேசம் பலமதச் சோபானஞ் சைவம் பெறவைத்ததென்
றூசம் பலமத மாகமெய்ந் நூல்சொல் லவர்மகிமை
யேசம் பலமதங் கொண்டுநின் றோமினி யெப்படிவாள்
வீசம் பலமத வாரூர்த் தியாகரை மேவுதுமே. [ருசு]

மேவா ரடங்க வெயிலோ டெரித்தும் விழையுமருட்
டேவா ரடங்க மகல்கம லேச சிலர்க்களித்தாய்
பூவார டங்க வெழுமுலை யாளுனைப் போற்றியுள்ளு
மாவார டங்க லிலாதுயிர் சோர்தலெம் மாதவமே. [ருஎ]

மாதவ மாகம மோர்ந்துசெய் வார்க்கருள் வள்ளலெங்கண்
மாதவ மாக மதனெய்த புட்கண் மதிகொளுத்து
மாதவ மாக மடங்கவும் வாட்ட வணங்குமிதம்
மாதவ மாகம லேசநின் னுற்கொ ளருந்தனமே. [ருஅ]

அருந்தன மாகர ளம்பிர சாதமென் றூர்ந்துபின்னு
ளிருந்தன மாகம லேசற்கி தேயுமென் றெண்ணியங்தோ
முருந்தன மாக மெயிறிடை கான்றனன் மூதிமயந்
தருந்தன மாகத்த வெங்குயிர் வாழ்வளித் தாரணிக்கே. [ருகூ]

தாரணி யுங்குழல் வாமக் கமலையர் தான்முடிபைந்
தாரணி யுங்குழல் வேய னயனிவர் தாமிகலாத்
தாரணி யுங்குழன் றும்பரந் தும்மறி தற்கரியா
தாரணி யுங்குழ விக்கன்னை யாவருட் டற்பரர்க்கே. [சுய]

தற்பர னுவடு தண்டுறை யானிறை தானுமிக்க
தற்பர னுவடுக் குஞ்சீர்க் கமலையிற் றன்கரவில்
வெற்பர னுவடு கக்குழ வுக்கும் விதிசிரங்கொய்
தற்பர னுவடுச் சேர்த்துல குய்யத் தணித்தனனே. [சுக]

தணியாத வம்பல செய்பாச வஞ்சகத் தன்மையுள்ளத்
தெணியாத வம்பல மாவியற் றேனையு மேன்றுகொண்டாற்
குணியாத வம்பல வாரூர்த் தியாக கொடுமைசெய்தெற்
பிணியாத வம்பல றுவோடு நின்பெயர் பீடுறுமே. [சுஉ]

உறங்கா துறங்கி யிராப்பக னீங்கிடத் துற்றவர்ச் சேர்
திறங்கா துறங்கினி யென்சொற் சரதந் திறம்பனெஞ்சே
மறங்கா துறங்கியிற் பஞ்சா மனுதி வருமலமா
மறங்கா துறங்கிள ராரூரன் முன்வந் தருளுவனே. (சங)

அருவா யருவுரு வாயுரு வாயவை யல்லனுமா
யுருவா யருமலப் பேரிருண் மூடுற் றுரைபிதற்றும்
பெருவா யருக்கறி யாதெம் பெருமக்கள் பேணுமருட்
டிருவா யருட்கம லேசனின் முன்சென்று சேர்மின்களே. (சச)

சேரற் கயமிசைத் தாழிய ஞதியர்ச் சென்றிவணு
ரூரற் கயமிசை யாரோ கணிப்பித் துறுகென்றுபின்
சூரற் கயமிசை யான்றடை நீத்துட டொழப்பணித்தோன்
சாரற் கயமிசைந் தாரூர்ப் பிரானெமைத் தாங்குவனே. (சரு)

தாங்கந் தரமிசை யாரூர்த் தியாகர் தடங்கடனின்
றேங்கந் தரமிசை யச்சென்ற கூற்றை யிருத்திற்றன்றே
யோங்கந் தரமிசை முன்னூ லுணர்ச்சி யிலூமர்களுக்
காங்கந் தரமிசை யாச்சிலர் தேவென் றமைந்ததுவே. (சசு)

அமையம் படரம் புயக்கண்ணி பாகத் தரநிற்சந்திச்
சமையம் படர வெனற்கூடு மேயர் தலைவர்க்குந்திக்
கமையம் படரவன் றெண்டன்வந் தாலன்றிக் காதரிதென்
றமையம் படரம் முடிக்கம லேசவென் ஞங்கருளே. (சஎ)

அருளம் பரத்திசைக் கூத்தியற் றுதியற் றையரரும்
பொருளம் பரத்திசை யாரூரர் நாமம் பொருந்துறநன்
னருளம் பரத்திசைத் தாய்சுக மேபொரு ளுடிச்சென்னித்
தெருளம் பரத்திசை தீக்கையர் பால்வந்து செப்புகவே. (சஅ)

செப்ப லரும்புகழ் வாகீசர் சேரர் கிரபுரக்கோ
னப்ப லரும்புகல் பாமாலை வாக னகிலமுண்ணூந்
துப்ப லரும்பு களக்கம லேசன் றுணைந்துவரு
மப்ப லரும்புகல் வேணிய ளோநம் மருந்துணையே. (சக)

அருந்தன மாதர மாகச்சென் றூரகல் வாமென்றுன்னி
வருந்தன மாதர மாகத் தமுதுண்டு மற்றெனக்கென்

பொருந்தண மாதர மாகங் கலப்பறப் போவலென்று
ரிருந்தன மாதர மாகம லேசற்சொ லென்னன்பரே. (௫0)

என்னையம் பாவை யெனப்பணித் தான்கம லேசனன்பர்
சொன்னையம் பாவை யருட்பாவன் பாகத் துணைவிக்கஞ்சி
மின்னையம் பாவைத் தகலா னிருக்கவு மேவகிலா
னுன்னையம் பாவை மலர்கொண் மதாரியென் றோதலென்னே.

ஓதந் தருமந்த வேணியன் பாணிய னேதங்கலை
போதந் தருமந்த ணக்கடி யார்க்குப் புரிபவர்க்கே
யீதந் தருமந்த வானந்த வாழ்வளித் தேன்றுகொள்வா
னேதந் தருமந்த புந்தியர்க் காரூ ரிறையருளே. (௫௨)

இறைவனை யாதவ னிந்தனற் கண்ணனை யெண்கமலை
நிறைவனை யாதவங் கந்தனை யாகனை நீள்கடற்பா
லுறைவனை யாதவ மாதவப் பாணனை யுள்ளியுள்ளக்
கறைவனை யாதவ மந்தோவென் னுள்கை கடந்தனவே. (௫௩)

கடந்தவ னந்த மறையந்த மாதியுங் காசினிமுன்
னிடந்தவ னந்த மருங்கைய னாகிய றொண்ணங்களு
நடந்தவ னந்தமி லன்பரிற் றோறு நவியவெழுங்
கடந்தவ னந்தரு கண்டன் கமலையிற் காரணனே. (௫௪)

காரண மாவ தறியாமை காதல் கருத்தன்றிவ
ணாரண மாவழு திக்குமுன் னூர்ந்த வரன்கமலைப்
பூரண மாவகி லத்துணின் றென்றன் புயத்தணியுஞ்
சீரண மாவரி யார்சம்மி யாகமிச் சித்தனளே (௫௫)

சித்தரு மாதவ ரும்பிமை யோருந் திறம்படாச்
நித்தரு மாதவ நல்வரம் வேண்டவுந் தின்மையிற்பூ
சித்தரு மாதவ மென்றொழி காமியர்ச் சென்றருளுஞ்
சித்தரு மாதவ ராரூரற் போற்றினந் தீங்கறுமே. (௫௬)

தீங்கரும் பாரகன் றோன்மாய்சொன் மீதுறத் தேனொழுக்குந்
தீங்கரும் பாரக லாரூர்த் தியாகனைச் சென்றடைந்தேன்
கோங்கரும் பாரகஞ் சாய்முலை யல்லியங் கோதையொர்பா
லாங்கரும் பாரகஞ் சென்றேத்து மோலக்கத் தானந்தமே. (௫௭)

ஆனக மாயிர மார்ப்பவெ மப்பர்சொ லாழியந்தேர்
மேனக மாயிருஞ் ஞாலஞ்செறிந்துள மெய்ம்மகிழ
வானக மாயிதழ் தூங்கம லேசன் வரும்பவனி
யானக மாமிருள் கண்டேன் விடையுனக் கீந்தனனே. (௯௮)

ஈந்தம ரும்புற் குடில்வேடர் மிச்சில மின்றவருக்
கீந்தம ரும்புனை யில்வாழ் வளித்த வெழிற்கமலை
வேந்தம ரும்புடை போதியி தோதி விரும்பியுளம்
வேந்தம ரும்புறங் கூறினர் மாலையும் வேண்டனமே. (௯௯)

வேண்டன மாத ரடுத்துநின் றூரூர் வியன்மறுகிற்
பூண்டன மாதர வீதுமென் றோர்சொற் புகன்றிலைமுன்
றேண்டன மாத ரகனலை சென்னியிற் சேர்த்தலகி
லாண்டன மாதரக் கொன்றைமற் றூர்க்கைய வாற்றினையே. (௱)

ஆற்றலை யார வளித்தனை யன்றி யழித்திலையாற்
றேற்றலை யாரனங் கற்கடந் தாரலை சீரிதன்றிக்
கூற்றலை யாரஞர் செய்கய மாக்கொடு கொல்லுகின்று
றாற்றலை யாரம் முடியாய் கமலை யமர்ந்தவனே. (௱௧)

அமரந் தரத்தவர் போற்றுங் கமலை யரவணங்கன்
சமரந் தரத்தவ மெய்யிவட் போந்தனை தண்ணருளாற்
பமரந் தரத்தவழ் கொன்றைகல் கென்றவென் பாற்கரந்தா
யமரந் தரத்த வளைகலை நீதி யழகுடைத்தே. (௱௨)

உடையானை யாவு முடைத்தானைப் பானுப லொண்கைமழுப்
படையானை யாவும் படைத்தானை யென்றவன் பான்மதியக்
குடையானை யாவுக் குடைந்தானை யாவெனுங் கொம்புக்கருள்
சடையானை யாவுகந் தாரூர் செலார் வினைச சார்பிதென்னே.

சாரங்க மாதரிக் குங்கரன் மாலயன் சாதருமெய்ப்
பேரங்க மாதரிக் குந்தோட் கமலைப் பிரான்சிரங்கை
நாரங்க மாதரிக் குட்படுக் குஞ்சொன் னகமகளார்
சேரங்க மாதரிக் குன்றவில் லாளியைச் செப்புகவே. (௱௪)

செப்பா ரகல முலையர்கட் பாசத் தினிற்பிணித்தே
துப்பா ரகலல்குன் முன்னீர்ப் படுத்தத் துயர்ந்தடைந்தே

னப்பா ரகலக் கடனின் றெடுத்தரு ளாய்தள்ளினு
மிப்பா ரகல னெளியேன் கமலை யிறைவனே. (சுரு)

இறையம் பகநுத லானந் தியாக னெழிற்கமலை
யிறையம் பகன்முடிக் கொண்டோ னருட்பெய ரொன்மனமோ
ரிறையம் பகவனென் றேதோடி யெங்கு மிடறலந்தோ
விறையம் பகவழி யாவாழ்வி னென்று மிருத்துவனே. (சுசு)

இருத்துக வன்றி யிணையடிக் கீழனு கேலிங்கென்க
வுருத்துக வன்றிரை போற்செல்கங் காமுடி யோயவையுன்
கருத்துக வன்றினைந் தேற்கர ணீதண் கமலையெந்தாய்
செருத்துக வன்றிமுற் சோமூன் றெரித்தருள் சேவகனே. (சுஎ)

சேவையர் காவல னூர்மநு நீதிகொள் செம்பியனு
ராவையர் காவ லறனெனத் தேரூ ரழகிற்றென்ற
பாவையர் காவலர் கொய்கம லேச பதிகவருட்
பாவையர் காவ லருளாளர்ச் சென்னறி பாலிக்கவே. (சுஅ)

பாலிக் கவருநா சேல்வேல் விழியெனப் பன்னிநல்லார்
பாலிக் கவருள மொன்றுபட் டேவற் பரிந்துசெய்யென்
பாலிக் கவருரு நீருக்கு மம்பக பாற்றியின்னே
பாலிக் கவருடென் னூரர நின்னன்றோர் பற்றிலனே. (சுகூ)

பற்றிலை யாக வடியெனை வாட்டும் படர்புலன்கள்
சுற்றிலை யாக வடியைவெஞ் சூலத்த தொல்கமலை
முற்றிலை யாக வடிமார்பர் செம்மன் முடித்தசிகைத்
துற்றிலை யாக வடியேற் கரணின் றுணைப்பதமே (எ0)

பதத்திடை யாவருந் தங்குறை கூறும் பசிரங்கமாம்
பதத்திடை யாவறி தோதலை யாரூர்ப் பதிதனியிற்
பதத்திடை யாவகுத் தென்சோக முற்றும் பழங்கணறுப்
பதத்திடை யாவர் புயத்தாம மீயப் பகர்சுகமே. (எக)

படரலை யத்தங் கொலைமா வுலாவும் பதிக்கென்கொலென்
படரலை யத்தளர் வாளல ராற்றும் பரிசலவென்
படரலை யத்தனவ் வல்லியங் கோதையொர் பாகன்சிரம்
படரலை யத்தன் கமலேசன் வெற்பாம் பைங்கொடியே. (எஉ)

பையர வப்பணி யாரகி லாண்டமும் பாற்றுதொழிற்
செய்யர வப்பணி யாதெழு மங்கித் திருக்கரத்தார்
செய்யர வப்பணி யார்முடி யாரூர்த் தியாகருக்குட்
செய்யர வப்பணி யாதரி யாருட் சினகரமே. (எங)

சினகரத் தானையஞ் சூலனை யன்பர்க்குத் தீவினையஞ்
சினகரத் தானையஞ் செய்கம லாலயத் தேவுளப்பூஞ்
சினகரத் தானை யளவாத கோடி தினகரர்நச்
சினகரத் தானையங் கைக்கம லேசனைச் சேர்ந்தனமே. (எச)

சேர்ந்தன மாலை யருளுருக் கொண்டு தினகரன்போ
லீர்ந்தன மாலையற கெட்டாப் பதந்தரு மெண்ணிதழி
யிர்ந்தன மாலை யமலக் கமலை யிறைவனென்றே
யோர்ந்தன மாலைப மின்றினி யேதெமக் குட்பயமே. (எரு)

பயமாக வந்தவஞ் செய்வார்க் கடுத்துப் பணித்தருள
பயமாக வந்தவ நாப்பணின் றேயிரு பண்ணவர்க்குப்
பயமாக வந்தவ ரிக்கேகச் சார்ந்துகம் பார்ப்பதியார்
பயமாக வந்தவ னிக்கம லைப்புகும் பான்மையென்னே. (எசு)

பான்மைய ஞசக லாரூ ரிருந்தச் பாநடஞ்செய்
பான்மைய ஞசக லையோர்ந் தமைந்தவர்ப் பார்த்தருளு
மேன்மைய ஞசகல் வான்றெறப் போந்த விடமிடற்றின்
மேன்மைய ஞசக வாஞ்சைபுற் றேனைபு மேவுவனே. (எஎ)

மேவு வசந்தவிண் ணேற்கரு ளண்ணலவ் வேந்தடிகேள்
பாவு வசந்த விழவிர தோற்சவம் பண்ணுகென்னப்
பூவு வசந்த விதாமி நந்திகள் போற்றக்கொண்ட
தேவு வசந்த விதழிய ஞரூர்த் தியாகென்பரே (எஅ)

என்பர வாமை யிருளியின் கொம்பிவை யேயணியா
மென்பர வாமை விழிகம லேசர்க் கிவரிடநிற்
கென்பர வாமைய லென்றய லேசின வேங்கினன்யான்
னென்பர வாமை யனமால் விடையவிங் கேன்றுகொள்ளே. (எசு)

கொள்ளங் கடந்தரு மானையம் போர்வையன் கோண்முனிவர்
கள்ளங் கடந்தரு மானையங் கைக்கொள் கமலையனை

யுள்ளங் கடந்தரு மானைய நந்த வுதவுமமருள்
வெள்ளங் கடந்தரு மானைய நெஞ்சம் விலக்குவனே. (அ௰)

விலங்க வரும்ப வரும்பவ மேதையும் வேண்டுதியேல்
விலங்க வரும்ப வரும்பவ ளச்சடை வேதியர்கை
விலங்க வரும்ப வரும்பவ னந்தரு மென்கொடியார்
விலங்க வரும்ப வரும்பவ வாரூர் விழைகநெஞ்சே. (அக)

நெஞ்சங் கமலை யரனச பாநட நேயன்மதிப்
பிஞ்சங் கமலை யரவார் சடையெம் பிரான்மலர்க்கை
யஞ்சங் கமலை யாத்தமெய் யண்ண லடிநிழற்போய்த்
துஞ்சங் கமலை யரந்தைக்குள் ளாகித் துயரலையே. (அஉ)

துயரம ணுதர்கண் ணீங்குறத் தன்புறஞ் சோர்கண்ணெளி
யுயரம ணுதரத் தொட்டுவர் பாழி யுடைத்தனர்சூ
ழுயரம ணுதண்டி யார்சூழி யின்பளித் தாள்கமலை
நயரம ணுதரத் தாய்க்கெமக் காரரு ளல்குகவே. (அங)

நல்குர வாற்ற வருத்தின வைபமெயஞ் ஞானத்திரு
நல்குர வாற்றந் தருவிப் பொலியுமெய்ந் நாதநறை
புல்குர வாற்றம் புயவேளை நல்கும் புனிதவளம்
பல்குர வாற்றற் கமலையெந் தாய்நிற் பரவுவனே. (அச)

பரவையுண் மண்டளி யான்கம லேசன் பணிந்துதன்னைப்
பரவையுண் மண்டளி யார்க்கருள் வானச பாநடமென்
பரவையுண் மண்டளி யாதரத் தேதரப் பைங்கொன்றைதான்
பரவையுண் மண்டளி யாம்பலன் மார்பகம் பற்றிநின்றே. (அரு)

பற்றி னகரனந் தத்தழல் கையிறப் பாற்றிமுடி
யெற்றி னகரனந் தஞ்சவங் கேசவ வேதுப்பெயர்
துற்றி னகரனந் தக்கரி யோயெனச் சூட்டியருண்
முற்றி னகரனந் தங்கம லேசன் முதற்றெய்வமே. (அசு)

தெய்வம் பலவல வொன்றேயத் தெய்வஞ் செழுங்கமலை
யுய்வம் பலவல மாதேவ னேனை யுயிர்மனமே
யெய்வம் பலவல மூந்துங் கயவ ரிசைப்பதெல்லாம்
பொய்வம் பலவலங் கையாற் கரும்பதம் போற்றுகவே. (அஎ)

போற்றுக வாதன மன்பக வன்பு புரிந்திலனிற்
போற்றுக வாதன மண்பெணச் சாரவை போந்திலனெங்
கூற்றுக வாதன கந்தளர்ந் தேனருள் கூர்ந்தினியங்
கூற்றுக வாதனற் கைக்கம லேச கொடியனையே. (அகூ)

கொடியரங் கானெய் யுதவா திகழநெய் கூர்புனலாம்
படியரங் காதவ் வரநெறிக் கேற்றிய பல்விளக்க
மடியரங் காத னமிநந்தி யார்க்கரு ளையவிடைக்
கொடியரங் கார்கம லேசவென் பாசத்தைக் கொன்றருளே. (அகூ)

கொன்றையந் தாமனை யாரூர்க் குழகனைக் கூற்றுவனைக்
கொன்றயந் தாமனை யான்றோர் செயல்வெளி கூறினனைச்
சென்றையந் தாமனை நல்லார் தரக்கொளுந் தேவையருட்
குன்றையந் தாமனை வேணியஞ் சேமனைக் கூறுகவே. (கூ0)

கூறுக வேதனை யாமோ ரிரவெனக் கோகிலமே
பாறுக வேதனை சூலங்கை யாரூர்ப் பரநுதற்கண்
மாறுக வேதனை வாட்டநிற் போற்றிய மாதிறந்தாற்
றேறுக வேதனைக் கங்கைய பெண்பழி சேருமென்றே (கூக)

சேரு மடிமைச் செயலா றெனுயிரர் செய்டவர
சாரு மடிமை யுரைவேந்தர் தொண்டர்க் கடியரென்பே
றேரு மடிமையி லாரூர வுண்டுகொ லென்றதென்னின்
றேரு மடிமையர்க் கார்க்கரு ளுதவி தோதுகவே. (கூஉ)

ஓதிய னந்தக் களத்தெங் கையர்மனை யுய்த்திவனுற்
றோதி யனந்த ம்படிறாரன் பார்வை யினொருகின்றாய்
சோதி யனந்தங் கனமிந்த வாரூர்த் துறையிற்கொண்ட
வேதி யனந்தம் பெறிற்பாண வீண்டு விளக்குகவே. (கூங)

விளக்கானி வந்த தெனப்புற் சிகையின் விளக்கெரித்தன்
புளக்கானி வந்த கணம்புல்ல ஞர்க்கரு ளொண்புவிசை
வெளக்கானி வந்தமு னில்லான் கமலை விமலன்மறைக்
களக்கானி வந்தனை யல்லாதி யாவுங் கரிசளவே. (கூச)

கரியனை யங்களங் கண்ணுத லானை கருத்தினர்க்கே
கரியனை யங்களங் கண்ணுத லானையைக் கார்மதனை

கரியனை யங்களங் கண்ணுத லானை கமலையனைக்
கரியனை யங்களங் கண்ணுத லானைக் கருதுவமே. (௯௫)

கரும்பம ரங்கையற் காய்கம லேச கடுக்கையமர்
கரும்பம ரங்கைய னத்தொளிர் வேணியங் கண்ணமல
விரும்பம ரங்கை யருளா லராவியெற் கின்பருள
விரும்பம ரங்கை யசபா நடநவில் வேதியனே. (௯௬)

வேதிய மாட கனற்றூமம் வேய்செல விண்ணவர்செல்
வேதிய மாட கமலேச மெய்யன்பர் வீறுமலம்
வேதிய மாட வம்பல வெம்பல விச்சையைநி
வேதிய மாடகச் சேவடிக் கீழின்ப மேவலென்றே. (௯௭)

மேவிய வாதிரை நாள்வண்ண முத்து விதானமுதற்
பாவிய வாதிரு நாவுக் கரசுசம் பந்தர்க்குரைத்
தேவிய வாதிப ளூரா னுற்சவத் தெய்திநெஞ்சே
சேவிய வாதிரும் பாதருட் பாதந் தெரிவிப்பனே. (௯௮)

தெரிமணத் தார்மணந் தாண்மூக் கரியச் செருத்துணையார்
புரிமணத் தார்கழற் சிங்கரப் பொன்கரப் பூவரிந்தா
ரரிமணத் தாரிவ ராதியன் பாளருள் ளத்தகலா
னெரிமணத் தார்க்கரி யான்கம லேசனை யேத்துவமே. (௯௯)

ஏத்தா மனத்தயன் கங்கைய வாரூ ரிறையச்சபைக்
கூத்தா மனத்தய வாளவென் றென்பதுட் கொண்டெமைநீ
நீத்தா மனத்தயங் கப்புறந் தள்ளினு நீள்கடுக்கைத்
தேத்தா மனத்தய சேயே மரணின் றிருவருளே. (௱)

திருவாரூரந்தாதி.

முற்றிற்று.

சிவமயம்.

# திருவாலவாயந்தாதி.

காப்பு.

புத்திவினாயக ருத்தரு மோக்கம் புரிகுநரு
நத்தி வினாயக வெற்பவென் றேத்த நயந்தருளுஞ்
சத்தி வினாயகன் றன்னால வாயினர் தாதியருட்
சித்தி வினாயகன் முனேசொல் விக்குமென் சிந்தைநின்றே.

நூல்.

திருவால வாயினி தஞ்செய லாற்றலன் றேற்றெழின்மு
திருவால வாயின் மருவுமென் சித்தத் திருக்ககற்றித்
திருவால வாயிலங் கும்பத நீழலிற் சேர்த்தருள்வாய்
திருவால வாயிற் கயற்கட் சுந்தாததித் தெள்ளமுதே. (௧)

அமுதா சனத்த வரனேக ருட்க வடர்விடமுண்
டமுதா சனத்த வரனேக தித்த வருந்தவருள்
ளமுதா சனத்த வரலோக லங்கரிக் காற்றுமம
ரமுதா சனத்த வரனேகண் கூட லருட்கடலே. (௨)

கடம்ப வனத்த மருஞ்சோம சுந்தரன் கம்பகங்கைக்
கடம்ப வனத்த மருஞ்சோ மருவுந கையரனெங்
கடம்ப வனத்த மருஞ்சோம வேணியற் கண்டெறசங்
கடம்ப வனத்த மருஞ்சோ மகிழக் கருதுவமே. (௩)

கருமனத் தானைத் துழன்றே னளகங் கழிஇப்பயந
கருமனத் தான முதலிமை யோர்கள் கவின்மறைப
கருமனத் தானையந் தாளெனுங் கூடவிற் கண்ணுதல்சற்
கருமனத் தானைத் துனையேத்து வாழ்வென்று கைவருமே. (௪)

வரமா தரத்தடைந் தார்க்கருள் கூடல் வரசவெற்பின்
வரமா தரத்த வகிலமுந் தோன்றி மடங்குறுந்தா

வரமா தரத்தத் திரலையெந் தாயெனை மாய்மலவக
வரமா தரத்த வரந்தையுற் றேனதை மாற்றுகவே. [௫]

மாற்ற மருந்திலை பற்பல வாக வழங்குவதென்
மாற்ற மருந்திலை யோதன நஞ்செனும் வார்குழையா
மாற்ற மருந்திலை வேன்முத் துகுக்குநின் மாலையருண்
மாற்ற மருந்திலை மன்றதென கூடலின் மாதவனே. [௬]

தவளத் தரங்கத் தமர்மா லிமயத் தடத்தலர்வந்
தவளத் தரங்க மணிமார்பர் தங்கிரி சார்ந்தெனவாய்ந்
தவளத் தரங்கர் கவுணிய ஞர்க்கரு டண்ணமுதார்ந்
தவளத் தரங்கண் மதுரேசர் பாதந் தலைக்கொண்மினே. [௭]

தலையுலங் காரத் தொடையா யெமக்குட றந்துவருந்
தலையலங் காரகத் தாற்றுன்ப நீக்கெனச் சாற்றுதற்கே
தலையலம் கார மலர்மாரி தூம்பொழிற் றண்மதுரைத்
தலையலங் கார முலைபாகன் மன்றின்று சாகுவமே. [௮]

குவளையங் கண்டனை யாள்வேற் குகனைக் குடங்கையிற்றுங்
குவளையங் கண்டனை யாதளித் தாளைக் குளிர்களம்வாக்
குவளையங் கண்டனை யாளைத்தன் பாற்கொளுங்கோனைமுன்புக்
குவளையங் கண்டனை யான் கூடன் மேவிலங் கொள்கைநன்றே.

கைதவ மாகக் கனவிலுற் றென்னைக் கலந்துபின்போ
கைதவ மாகவி ஞர்மது ரேச கருத்தினிலோ
கைதவ மாக வலைப்படு வேற்குன் கருணையினுற்
கைதவ மாகர்க் கருந்திருக் கோலத்தைக் காட்டுகவே. [௰]

காப்பது மத்த ரரியார் பதியெனக் கண்ணிப்பின்சோ
காப்பது மந்தர் குணமாகுங் கூடலிற் கண்ணுதல்வெண்
காப்பது மத்தரு கண்மணி யைந்தக் கரமுநம்மைக்
காப்பது மத்த முடியார்மெய்ச் சாதனங் கண்டிடினே. [௧௧]

கண்டக ராவி கொளுஞ்சூல கூடலிற் கண்ணுதல்செங்
கண்டக ராவின் றொடையா யருமறை காணரும
கண்டக ராவிழக் கொல்கணை யேந்துங் கரதலவென்
கண்டக ராவினை நேராக நின்னுருக் காண்பதென்றே. [௧௨]

என்றலை யாரன் விந்துகன் ஞார்மது ரேசரடி
யென்றலை யார முடித்தற் குபாய மிதுவெனு நா
லென்றலை யார மனக்கொண் டிலம்பின் னிடரொழிவ
தென்றலை யாரடை விற்புகுந் தாருமவ் வின்புறலே. [௧௩]

இன்றம ராவதி யங்கிரி ப்ங்கய மேய்ந்தபுவி
யின்றம ராவதி மோகமுற் றேற்கிவ் விளமயிலை
யின்றம ராவதி பாங்கியர் பாங்கினின் றீர்த்திவண்கூட்
டின்றம ராவதி டக்கையன் கூடலி னென்றவமே. [௧௪]

தவத்தா ரகஞ்சுக மாவீற் றிருக்குந் தலைவனைம்பா
தவத்தா ரகஞ்சுகந் தப்பத வாழ்வு தராதகல்வோ
னவத்தா ரகஞ்சுக மோதால வாயன் றடக்களிறீந்
தவத்தா ரகஞ்சுகன் பாதார விந்தஞ் சரணமக்கே. [௧௫]

நமனு தரங்கொண்டு நம்பக்க லேகிட நாடுறுமுன்
னமனு தரணிய மாமூன் றிறையரு ளாமலமா
நமனு தரக்கொண்டு விட்டார்க்கு நின்றிடு நன்னிபவ
னமனு தரன்பரஞ் சேவடித் தாளுண்டு நஞ்சிரத்தே. [௧௬]

சிரமாலை யங்கண் மதுரேசன் வெற்பின் சிறகரிவச்
சிரமாலை யங்கண் பழிதுடைத் தாண்டவன் செம்மணிவச்
சிரமாலை யங்கண்ட தென்னற் களித்தவன் றேவிதழிச்
சிரமாலை யஞ்சர நெல்லியிற் காட்டவுந் தேர்ந்திலரே. [௧௭]

இலமா தரத்தம் விரும்பியைம் பாசத்தொ டெம்மியலாய்ந்
திலமா தரத்த பதியிய லோர்ந்தில மிக்கடற்பா
ரிலமா தரத்தகைக் கூடற் பிரானடி யேத்திலமெண்
ணிலமா தரத்தழி யாவாழ்வு நாம்பெற லெப்படியே. [௧௮]

படியங் கனைமுக மாந்தமிழ்த் தேயநம் பாண்டியதிற்
படியங் கனைகண் மணிகூடல் பாவை பயனடையும்
படியங் கனைவரு மேத்தால வாயிறை பற்றுளிசிர்
படியங் கனைமுடி யன்னான் றனைமனம் பாவிக்கவே. [௧௯]

பாவிய மன்றனை யாரு றிவர்ந்தருள் பற்றிச்சென்று
பாவிய மன்றனை யான்கூடன் மேவிப் பணிந்திலநம்

பாவிய மன்றனை யாவற லோதியர் பாற்புரிந்தோம்
பாவிய மன்றனை யாவா கடக்கும் பரிசெளிதே. [உ௰]

பரமதத் தானை பவர்க்கருள் கூடற் பகவதிகம்
பரமதத் தானை யுரியா யிருப்புப் பரவுசிதம்
பரமதத் தானை திரிசூல மாக்கொள் பவநினக்கே
பரமதத் தானைவ ராட்டக் குலையுமெற் பாலிப்பதே. [உக]

பாலம் பரிக்கு மரிக்கண்ண கூடற் பகவநின்றன்
பாலம் பரிக்கு மரிமதர்ச் சேற்கட் படலைசுற்றைம்
பாலம் பரிக்கு மரிக்கீந்த தெங்ஙனப் பாலுமற்றும்
பாலம் பரிக்கு மரியா யவடந்த பாக்கியமே. [உஉ]

பாக்களை யோதினங் கொன்னே யுலோபர்க்குப் பாடித்தத்தம்
பாக்களை யோதி யுடையார் விழையும் பயன்களருள்
பாக்களை யோதிம வாவியங் கூடற் பதியமர்ந்த
பாக்களை யோதி யிடத்தானை யாதுகொல் பாடலரே. [உங]

பாடவந் தானின் றனங்கன்செய் வானிசைப் பாணிருவர்
பாடவந் தானின் றலைமைக்கென் னுமதற் பார்த்தெரித்த
பாடவந் தானின் றவன்செயன் மாற்றிலை பைம்பொதியப்
பாடவந் தானின் றணங்காவி கூடன்மெய்ப் பாவகனே. [உச]

பாவனை யாகத் தனைநோக்கு வார்க்கருள் பாலித்தவர்
பாவனை யாகத் தவியார் முதல்வனிப் பாருமற்றும்
பாவனை யாகத் தமர்வான்றென் கூடற் பதியனருட்
பாவனை யாகத்த வென்றேயன் னன்றனைப் பாடுமினே. [உரு]

பாடலங் கொன்றை யருள்கூட மத்தகம் பாதம்வைத்துப்
பாடலங் கொன்றை யருள்வார்க் கருளும்பரனளிபண்
பாடலங் கொன்றையென் றுய்மது ரேசன் பழமறையான்
பாடலங் கொன்றைய லார்க்கெங்ங னீவனிப் பாடித்தே. [உசு]

பாரம் பரியநிற் கேயடி யேனிடர் பாற்றுதனின்
பாரம் பரியலை யின்றெனின் மீட்டுநின் பாலதன்றே
பாரம் பரிய புகழ்சேருங் கூடற் பதியமறைப்
பாரம் பரியவென் னுணவக் கோளறப் பார்த்தருளே. [உஎ]

பாரங் கதப்பதி விண்போற்று கூடற் பகவசடா
டாரங் கதப்பதி யாதெழுந் தார்த்தவப் பாணிவைத்தோய்
பாரங் கதப்பதி நூலன்பர் போற்றும் பரவருட்கண்
பாரங் கதப்பதி கந்துனைக் கூடவென் பாவகமே. (உஅ)

அகத்தா னவநிலை நீறுக்கி வான மளித்தவனன்
பகத்தா னவநி ரதிசய வாழ்வடி யார்க்கருளி
யகத்தா னவநிரை மாமணி வாணிக னுமதுரை
யகத்தா னவநி தொழும்பத மேநமக் காதரவே. (உகூ)

ஆதரித் தானந்தத் தாழக் கருதடி யாரிடர்கண்
டாதரித் தானந் தரநாட ரேத்தர னங்கையினி
லாதரித் தானந்த நாகெல்லை செய்நக ரத்தடைபவா
ராதரித் தானந் தனிற்கர நீட்டி யலைந்தனரே. (நய)

அருமந்த வாழ்வென யானீன்ற வுந்தி யழலவடி
யருமந்த வானும் பணிகூடல் வெற்பனென் டாங்கனலே
கருமந்த வான்சுரஞ் சென்றதந் தோவென் னருமையம்பூ
வருமந்த வாசமும் போலென்ன வென்க ணமர்ந்தனளே (நக)

அமலந் தரங்க முறச்சலம் வேறொன் றமைத்துவந்தே
யமலந் தரங்க மிசைப்பாணர்க் காவிற காற்றியுமுள்
ளமலந் தரங்கப் பகைசாய்த்தி யென்பகைக் கங்கண்ணினேக்
கமலந் தரங்கர விற்கூட லாயஃ தாணவமே. [நஉ]

ஆண்டலை யானை யளித்தானை யென்னை யடர்பவத்துய்த்
தாண்டலை யானைத் தமிழ்கூட லானை யழுக்ககற்றி
யாண்டலை யானைய வாமலெற் காத்த வருண்முதலை
யாண்டலை யானை யுரித்தானை யன்றிமற் றூர்துணையே. [நந]

ஆரந் தரிக்குங் கௌரிய னுக வயின்மதலை
யாரந் தரிக்குளக் கோனுக் கிசைய வளித்தவற்சே
ராரந் தரிக்கு மியற்கையர் கூட லரனுக்கிவ
ளாரந் தரிக்கு வளையம் பரிக்க வழுங்குமன்றே. [நச]

மன்ற மரும்பத மாறிக் குனித்து வழுதியுள்ள
மன்ற மரும்பதஞ் செய்யால வாயன் மலரடிமுன்

மன்ற மரும்பத முங்கசக் கத்துயர் வாட்டமெல்லா
மன்ற மரும்பதம் பார்த்தோது வாயென் மடக்கிள்ளையே. [நரு]

கிளைவாக னத்த மணிவீதி யுற்றுக் கெழுமியநிற்
கிளைவாக னத்த நடைகாண வூற்றுக் கிடைத்தனள்கைக்
கிளைவாக னத்தயில் வற்ருள்பொற் கூடற் கிழவவுய்க்குங்
கிளைவாக னத்தன் மலர்மாரி சூழ்ந்துடல் கீண்டனவே. (நசு)

அனந்தனை யாரங் கமலப்பொன் வாவி யமர் மதுரை
யனந்தனை யாரங் கமலர்ப் புயத்தினி லாற்றினன்பை
யனந்தனை யாரங் கமலங் களஞ்சிர மார்த்தவற்சார்ந்
தனந்தனை யாரங் கமலப்பொற் ருளினி யார்க்குறித்தே. (நஎ)

தேவாலே யங்க ணுடைந்தாறு சேறலிற் செந்நெல்விளை
தேவாலே யங்கண் ணரசாளுங் கூடற் சிவபுரமா
தேவாலே யங்கண்டு மூன்றுக் கிறையெனத் தேற்றிப்பின்னுந்
தேவாலே யங்கண் டனமாமென் ருய்மறை தேர்கிலரே. (நஅ)

ஏற்ற மருங்கொடி யாய்கூட லின்றென் றெழுந்திதழி
யேற்ற மருங்கொடி பூண்முலைக் கீந்திலே யேகுறுவை
யேற்ற மருங்கொடி யாராய் வருத்த விறும்பழியஞ்
சேற்ற மருங்கொ டிருநாம மேன்மது ரேசவிள்றே. (நகூ)

இன்றக லாரவி யன்மார்பர் சொற்கருத் தெண்ணலன்ப
யின்றக லாரவி யன்ஞர் கணர் பொழுதேகிடத்து
யின்றக லாரவி கண்ணரென் வெள்ளை யிசைத்தனர்கு
யின்றக லார விழிபாகன் கூடற்க ணேற்றதன்றே. (சய)

அன்ரு வரித்த புரமூவர் வாழ வருள்கொடுத்த
வன்ரு வரித்தவி சேறிய மாறனம் மாணவமா
மன்ரு வரித்த திரைநீத் தருள்வ ணதற்கினிவே
றன்ரு வரித்த கொடிக்கூட லானை யடைதிநெஞ்சே. (சக)

அடையல ராகவத் தோச்சயி லேதுணை யாகவந்திங்
கடையல ராக வருந்தனி மார்க்க மடியரிடு
மடையல ராக வனைகூட லான்வெற்ப வன்புமிக்க
வடையல ராக வனவிடை யாயென் றணங்குறுமே. (சஉ)

அணங்கா தரத்த வடிபேர்க் கறிய ளலகுமிந்த
வணங்கா தரத்த மதுரையுஞ் சேய்த்த தணித்ததிரா
வணங்கா தரத்தய பிற்பகலின்றரு ளாரிமவெற்
பணங்கா தரத்தனே பாகத்தன் சீரிங் கறைந்திருந்தே. (சங)

இருந்தனங் காரண மாகவென் னீத்தன ரேகியங்குற்
றிருந்தனங் காதலர் பொய்த்தா ரெனவிரங் கேல்வைமக
ளிருந்தனங் காத்திரந் தன்னினுங் கூரல ரெற்கொலுநீ
யிருந்தனங் காளிச் செயலாங் கவர்க்குற் றியம்புமினே. (சச)

இயம்புக வானந்த மேகளங் கார்குழ லிக்குரைகண்
ணியம்புக வானந்த ரம்பை யிடத்தின னிம்பர்க்கிரங்
கியம்புக வானந் தனிலேற்ற வேணி யிமையவர்நாட்
டியம்புக வானந்த வாழ்வருள் கூட லிறைபெயரே. (சரு)

பெயரா தரித்திலங் குங்கொடிக் கூடற் பிரான்கரளம்
பெயரா தரித்திரி கேள்வன்கங் காளமும் பேணுமரன்
பெயரா தரித்திற வாநிலே சேரிப் பிறங்குநெறிப்
பெயரா தரித்திர மோரா ரவரொடும் பேசலமே. (சசு)

சலமா கவரு மிமையா சலன்முற் றனையையென்னுஞ்
சலமா கவரு மிமைமதி வேணிய தண்மலையா
சலமா கவரு மிமையோர்சொல் கூடற் றலைவவுட்சஞ்
சலமா கவரு மிமை நீக்கி யாணிற் றலைப்படவே. (சஎ)

பட்ட மருந்துவக் கென்பாரம் பித்தன் பரவுதன்பேர்ப்
பட்ட மருந்துவ தாலம் பயிக்கம் பரிவெஞ்சினம்
பட்ட மருந்துவல் லானல வாயம் பதியனுதற்
பட்ட மருந்துவன் பாலென்கொ னேமனம் பற்றினளே. (சஅ)

பற்றுர கம்படக் குந்தமிழ்க் கூடற் பரவிருளிப்
பற்றுர கம்படக் குந்தடக் கைப்பிடி பாற்புணரும்
பற்றுர கம்படக் குந்தனி நாதநின் பாதங்களே
பற்றுர கம்படக் குந்தம நீத்தருள் பாவிப்பையே. (சகூ)

ஏதம் பலவா யலைக்கவும் பூங்கொடி யேந்துமதி
யேதம் பலவா யமுதளித் தாள்கவென் றேக்கறுமெற்

கேதம் பலவா ணனைக் கூட லெந்தையை யேத்தியரு
ளேதம் பலவாழ் வெனக்கலந் தார்தம் மினம்பெறலே. (ருய)

இனமாக மற்ருென் றிலாவமு தேமது ரேசனன்ப
ரினமாக மந்தமிழ் வேதமெய்ப் போத மியம்புகிடை
யினமா கமவொலி கேட்கின்ற தாலிங் கிடருறலே
கினமா கமரு வுஞ்சிகைக் கூட லெயிற்பதியே. (ருக)

பதியா ரகந்தைக் கிடனுக் குவருளம் பற்றருளென்
பதியா ரகந்தென் றூர்ந்தவர்ப் போற்றிலர் பல்லுயிர்க்கும்
பதியா ரகம்ப மதகரித் தோலம் பரமதுரைப்
பதியா ரகனமர்ந் தேத்துமெந் தாயிவர் பாவமென்னே. (ருஉ)

பாவக னிந்தனங் கிரம் மிழுதெனப் பல்லுயிரும்
பாவக னிந்தம ரும்மதிற் கூடல பஃறெழில்செய்
பாவக னிந்த மதிமலி வாங்கெனப் பாணர்க்கருள்
பாவக னிந்தரு ளாயெனின் வேறொரு பற்றிலனே. (ருங)

இலம்பக வாணுத லார்க்கேவ லேசெய் திரந்தவர்த
மிலம்பக வாஞ்சை யொழியா துலேந்துலேந் தேகுவனென்
னிலம்பக வாமது ரேசவெண் ணீற்றி னெழில்கொணெற்றி
யிலம்பக வானத் தழியாத வின்பமென் றெய்துவனே. (ருச)

எய்ய மருங்கு மதன்மதி காய வினையத்தென்ற
லெய்ய மருங்கு வளைக்கண்ணியன்னைய ரேசப்பெற்று
ளெய்ய மருங்குலைப் பூங்காணிற் கேழற் கிரங்கியநீ
யெய்ய மருங்குவ ளாவியென் னுமது ரேசவின்றே. [ருரு]

வித்தக வாதபு ரேசரை யாண்டவ வீமதன்கோ
வித்தக வாதனை செய்தன னரது விரநிற்பா
வித்தக வாத மயிலிறந் தாலொண் மிடறுபைங்கா
வித்தக வாதமிழ்க் கூடலெந் தாயிவ் விவேகிக்கவே. [ருசு]

விவேகந் தரமன் றிங் கோர்கொடி தாங்கிரு வெற்பினம்மா
விவேகந் தரச்சென் றிபந்தெறப் பாயுமவ் வேலையின
விவேகந் தரன்மது ரேசன் னருளென வீரனுத
விவேகந் தரவி யுளநா ளளவுன்ன வீட்டினனே. [ருஎ]

வியலங் காரக மோர்ந்தொரு நூலும் விளங்கறியம்
வியலங் காரக வாவியங்கூடலு மேவிலமா
வியலங் காரக டுக்கைய ளேக்மெலம் வீண்மனப்பா
வியலங் காரகத் தேயான் பதமென்று மேவுதுமே. [ருஅ]

மேவல ராவிய ழித்தருள் வானை விரைப்பொன்மரை
மேவல ராவிய டுத்தாடிக் கூடிமுன் வீழ்ந்துதி
மேவல ராவியங் கூரால வாயன் வியந்துணம்மை
மேவல ராவியன் வாழ்வுற் றிருக்க விதிக்குவனே. [ருகூ]

விதியரி யங்கனை மார்பனைத் தேவெனும் வெண்மையுந்து
விதியரி யங்கனை கூடல வேகஞ்சொல் வீணரைச்சேர்
விதியரி யங்கனை காலஞ்சுத் தாத்துவி தப்பதமே
விதியரி யங்கனை யுந்தாற்று சூலவிவ் வேண்டுவனே. (சூய)

வனந்தர மாக நகில்களங் கண்ணிடை மங்கைபங்க
வனந்தர மாகஞல் கொன்றையங் கூடல் வரதகைக்கொள்
வனந்தர மாக மலைதில்லை முற்பதி மன்னவிடு
வனந்தர மாகணஞ் சூழநின் முடல்சொல் வாய்மலர்ந்தே. (சூக)

மலரம் பகத்தலை மாலையுண் டாக்க மதிவருத்த
மலரம் பகத்தலை மாலையும் வாட்டு மதனெரிய
மலரம் பகத்தலை மாலையுக் கூடல் வரதன்முன்வாய்
மலரம் பகத்தலை மாலையுஞ் சந்தனம் வந்தனமே. (சூஉ)

வந்தனஞ் சந்தனப் பாரவென் றேத்தி வணங்கித்தம்பா
வந்தனஞ் சந்தனல் லானன நோக்கி வருக்கவின்னு
வந்தனஞ் சந்தன மையம் பெருமல் வருந்தியதோ
வந்தனஞ் சந்தனக் கொங்கைநன் மாற்றம் வழங்கலதே. (சூங)

கலங்கலை யன்னைநின் ளேதியைத் தோகைதன் காரென்றிதழ்
கலங்கலை யம்மத் தணியார மூரலுங் கண்டகவும்
கலங்கலை யங்க ணிருந்தார் பிழைத்திலர் காரரவ
கலங்கலை யத்தர் மதுரேச ரன்பர்சொற் காணுதியே. [சூச]

காணம் பலமனை மக்கண்மெய் வாழ்வெனக் கன்னியொன் றுங்
காணம் பலமனைத் தாய்தொண்டர் தந்தொகை கண்டவர்க்குக்

காணம் பலமனை யேற்றமு தீந்த கருணிவெள்ளிக்
காணம் பலமனை யந்தோ பணிந்திலை கன்னெஞ்சமே. (௬௫)

கன்னலை யம்பரூப் பார்க்கண்டு தேமலுங் கண்டினிய
கன்னலை யம்பட்ட மாரன்விற் போந்த கடுக்கையுமே
கன்னலை யம்ப னருளுண் டெனவுயிர் காவினளே
கன்னலை யம்பன் மனையேற்குங் கூடலிற் கண்ணுதலே. (௬௬)

கண்ணுத லானை யளித்தாய் மறுகுறக் கண்டிவணிற்
கண்ணுத லானையி னஞ்சாப் பழிக்குக் கடவுளென் றிங்
கண்ணுத லானைப் பெயர்கோடி சிவகறுணிதறு
கண்ணுத லானை யருளாங்கொல் கூடற் கறைக்கண்டனே. (௬௭)

கண்டங் கரியனைத் தென்கூட லானைக் கௌரிதந்த
கண்டங் கரியனைப் பல்பூத வண்டவ கம்புறம்ப
கண்டங் கரியனைச் சுந்தர மாறனைக் காலந்தொறுங்
கண்டங் கரியனை வில்வாழ்வு கோடல் கடைப்பிடியே. (௬௮)

கடையங் கடலி னெழுமால கண்ட கடிமதுரைக்
கடையங் கடல்விடை யின்மீற் களித்த கௌரியனே
கடையங் கடப்பில் பவக்கடன் மூழ்கிக் கலங்கலறக்
கடையங் கடவயி ராவண மேற்கொண்முக் கட்கரும்பே. [௬௯]

கட்டங்கங் கொண்ட கரன்போத வாசகங் கண்டவர்க்குக்
கட்டங்கங் கொண்டவங் கண்டனு காவணங் காக்கவுன்னிக்
கட்டங்கங் கொண்டன் பரிபஞ் சவற்கருள் காரணனைக்
கட்டங்கங் கொண்டல்செய் நான்மாடக் கூடலிற் கண்டேமினே.

கண்டனங் காதரங் கோட்டுக் கொடியுட் கவலற்றநோக்
கண்டனங் காதரம் பூங்கணை யேவுநின் கட்டிறலைக்
கண்டனங் காதரத் தேகுமங் நாளிமக் கன்மகள்சொற்
கண்டனங் காதரஞ் செய்கூட லான்முனுங் கண்டனமே. (௭௧)

கண்டா வளியையுங் கற்றோற் கருத்தியக் கைதவன்றன்
கண்டா வளியைய பொன்னு டியர்மங் கலமளித்த
கண்டா வளியையி லாரத்த கூடற் கடவுளருட்
கண்டா வளியைம் புலப்பகை சாய்க்குங் கருத்தினையே. (௭௨)

கருத்த மரப்பணி செய்குல சேகரன் காதன்மரு
கருத்த மரப்பணி லக்கள மீற்கணி கண்ணுமழ
கருத்த மரப்பணி வேணியர் மாமடிக் கள்ளவணி
கருத்த மரப்பணி யேணிசெய் மாநகர்க் காவலரே. (எங)

காவல ராவதி கம்பட வாழ்ந்து களிப்பதிற்கங்
காவல ராவதி வேணிய தார கையிற்பொலிந்து
காவல ராவதி கழ்கூட லாயன்பர் கண்டமிச்சில்
காவல ராவதின் ஞயாய்ப் பிறத்தல் கனம்பெறுமே. (எச)

கனத்தானை வாகக் கனவானை வாண்முன் கலவியுஃவா
கனத்தானை வாக மரவூர் பிரான்கயற் கண்ணியொடே
கனத்தானை வாகயிற் சூலிதன் கூடற் கடிதுறப்பா
கனத்தானை வாகம் புரந்தரத் தேரைக் கடவுதியே, (எரு)

கடப்பணி யானை நுதற்கண் ணிலட்டுகைக் கைப்பெரும
கடப்பணியானைப் பிரணவத் தீன்றெண்கர் கன்னிமரீஇக்
கடப்பணி யானை யனசாம் பவற்பெற்ற கார்க்கரக்கற்
கடப்பணி யானையக் கும்மது ரோசனென் கன்னலவனே. (எசு)

கண்ணனை யம்பகங் காறர வாழியங் கைக்கருளங்
கண்ணனை யம்பக வன்மது ரோசன் கடுக்கைபழங்
கண்ணனை யம்பகத் தாதைக் கியற்றிற் களித்தருள்வன்
கண்ணனை யம்பகல் கண்ணிய துன்னிக் கவல்வதென்னே. (எஎ)

கவனத்த வாவர மீற்கண்ணி பாகவங் கட்கடம்ப
கவனத்த வாவர வென்றறி யேத்திக் கருதிவந்திக்
கவனத்த வாவரம் வாங்கெனுங் கூடலன் கற்சுகங்காள்
கவனத்த வாவர ஞடிலென் செல்கை கரைமின்களே. (எஅ)

கரையா மனத்த பருவம் பெருநின் கருமலத்தைக்
கரையா மனத்தனை காணுத பாதந்த காதெனவே
கரையா மனத்தள் ளினுஞ்செலன் கூடற் கடியெயின
கரையா மனத்த வினையன்றி யுண்டுகொல் கான்முனைக்கே. [எகு]

கானம் படுக்குநெஞ் செம்பெரு மக்கண்முற் காணருணூற்
கானம் படுக்கு மரன்சோம சுந்தரன் கட்கடுக்கை

கானம் படக்கு மதிவேணி நின்றுமெங் கண்ணுநிபக்
கானம் படக்குந் தலத்தான் பதநிழற் கண்ணின்பமே. (அ௰)

இன்பந் தனைய சொல் லார்க்கும் பொதுவென் றிமகிரிசை
யின்பந் தனைய மூலைத்தழும் பான்மது ரேசன்சண்பை
யின்பந் தனையமண் மாற்றற் கருளிறை யேத்தருணா
வின்பந் தனைய விதிப்பவு மங்நெறி யெய்திலரோ. (அக)

திலமாலை யஞ்செயுஞ் செக்கிலந் தோபடுஞ் செய்தியின்னித்
திலமாலை யம்மத் தவரால் வருந்தித் தியங்குறுமந்
திலமாலை யட்டடி நாயேன் கருத்தைத் திருத்திடுக
திலமாலை யம்மது ரேசநின் பாலன்பு செய்வதற்கே. (அ௨)

செய்யாரமருஞ் சடையா யுளவில தேர்ந்தமனச்
செய்யா ரமரும் பதத்தாய் கயற்கண்ணி சேர்ந்தபங்க
செய்யா ரமரு மதுரேச வன்னையர் தீங்கினியென்
செய்யா ரமருந் தொடங்குவர் போலுந் தெளிகவின்றே. (அ௩)

இன்ற மணியற் றிருணீக்கிச் சேட னெழின்முடிப்ப
யின்ற மணியங் கிடப்பூதி செய்கென வேன்றமுத
யின்ற மணியங்க ணுற்றது மாற்றி யிலக்குறுங்கு
யின்ற மணியற் கதிர்மணிக் கூடலை யேத்துமினே. (அச)

மின்னங் கடக்கு நிரைமாட மேய வியன்மணியின்
மின்னங் கடக்குவை யல்லோடு கூடல் விழைந்தடையு
மின்னங் கடக்குஞ் சரத்துரி யானிட மேவுமலை
மின்னங் கடக்கு மிடற்றுரத் தான்பத மேல்வைப்பனே. (அரு)

வைய மளித்தவன் கங்கையன் கூடல் வரன்மலைப்பா
வைய மளித்தவச் செய்பூசைக் கேகுழை வானினிநாம்
வைய மளித்தவர் பித்தவென் றூர்க்கு வலிந்தருட்கண்
வைய மளித்தவழ் கொன்றைய னெங்கருள் வானமக்கே. [அசு]

வானம் பரவு தமிழ்க்கூட லுதன் மதியிதழி
வானம் பரவுறு வேணியன் மாறன் மனமகிழு
வானம் பரவுந் நதநடச் சேவடி மாற்றினவன்
வானம் பரவுயிர்க் குள்ளுயி ராய வழிமுதலே. [அஎ]

முதலையம் பார்பட்டத் தார்மகப் பிற்பகன் முன்னிற்கெழு
முதலையம் பாவிற்செய் சைவ சிகாமணி முன்னமுற்ற
முதலையம் பாலிகை பாலிரு காற்சென் முழுதுயிர்க்கு
முதலையம் பாவுஞ் சடைக்கூட லான்றனை முன்னுவமே. (அஅ)

முன்னம் பலவரும் வேங்கையும் பூத்தவெம் மொய்யிழையார்
முன்னம் பலவ ருயிர்சோர யீண்டி முருக்குமிதன்
முன்னம் பலவரு முன்மனச் செய்கையை முன்னுவெள்ளி
முன்னம் பலவருத் துங்கப்பொற் கூடன் முனைவெற்பனே. (அகூ)

முனைத்தவ னம்பயில் வெள்ளிவெற் பாதிக்கு முன்னெழுந்து
முனைத்தவ னம்பயிற் கங்கையன் காலன் முனிவரன்கான்
முனைத்தவ னம்பயி லானுவி யென்றவன் மூள்பவமா
முனைத்தவ னம்புயிர்க் கங்கியக்கூடலின் மூர்த்தியன்றே. (கூ0)

அன்றலை யாவியற் றைம்புல னூட்ட வலைதின்னு
மன்றலை யாவிய கம்பிர மஞ்சொலி யற்றனம்பற்
றன்றலை யாவியங் கேனக்கு மம்ம மளித்ததயா
ளன்றலை யாவியக் குங்கூட லானமக் காதரமே. (கூக)

தரமாலை யாதிகற் றோணிய தாகத் தளர்ந்தருகந்
தரமாலை யாதிகம் பட்டேங்க வூர்ந்தவர் தம்மிதபத்
தரமாலை யாதிகழ் தென்கூட னுதவெந் தாயமர்சுந்
தரமாலை யாதிகந் தம்போற்று நின்றன் சரண்சரணே. [கூஉ]

சரபந் தனைய விழிமூலை பாகமெய் சாற்றிதழிச்
சரபந் தனைய வின் சொற்கூட லாயுய்த்துத் தாவில்வலிச்
சரபந் தனைய விருவே றுருவரி சாய்த்தவகோ
சரபந் தனையவிழ்த் தாற்றியெற் றூங்கநின் றண்கழற்கே. [கூ௩]

தணவாத் தனந்தனி யாயோலை நல்லைச் சபைமுனல்கந்
தணவாத் தனந்தனி டத்தாய் கலங்குநிற் சாருமன்பந்
தணவாத் தனந்தனில் வேளே வழுத்துஞ் சதுர்மறைமந்
தணவாத் தனந்தனி றாஉமது ரேசசரதமிதே. [கூச]

சரமா வனத்த னலையாக்கொள் கூடன்மெய்த் தானுவெற்பர்
சரமா வனத்தழை யாற்கொணு மாற்றமச் சாக்கியர்கற்

சரமா வனத்தரற் கோச்சுங் கருத்தைத் தரும்பிடிக்குஞ்
சரமா வனத்த நடைநோக் குதியிவர் தற்பரமே. [௯௫]

பரமனத் தானை யுகைத்தான் சருமம் பலிக்கலமம்
பரமனத் தானை யுகிராலங் கட்டக பாலனகம்
பரமனத் தானை யுவரா லடையப் படாப்பரவம்
பரமனத் தானை யுகந்தானைப் போற்றிப் பணிகுவமே. [௯௬]

பணியணி யானை மதுரே சனைப்புகழ் பாணநிற்கும்
பணியணி யானை வசித்தார் தனமுண்டென் பான்மறக்கப்
பணியணி யானையந் தார்தன முண்டவன்பாக்கியமே
பணியணி யானை யுருட்டுங் களிறுண்டென் பாலதுவே. (௯௭)

பாலனம் பாத்த முனுமென்ற பாணவென் பாலவர்பொய்ப்
பாலனம் பாத்தளர் சொல்லேன் புகறி பழமறைக்கப்
பாலனம் பாத்தரு மிக்கீந் தருளும் பரன்சிரங்கட்
பாலனம் பாத்தன் மதுரையிற் போய்ச்சொலப் பாவையர்க்கே.

வைத்த வளங்கவர் வெஞ்சூல கூடல் வரதவருள்
வைத்த வளங்க தவனெனுஞ் சுட்டுணர் மாற்றுநின்சே
வைத்த வளங்கனி நீற்றன்பர் சார்ச்சி வழங்கமுன்று
வைத்த வளங்கலை வெண்பிறை வேணி வனைந்தவனே. (௯௯)

வனையும் பரவன் மதுரேச னைக்க மருவிலந்த
வனையும் பரவ மெனநெஞ் சிரங்கன் மலைமகட
வனையம் பரவ னதுவாத சாந்த மகிழ்ந்திறைஞ்சின்
வனையம் பரவத் தருவா னழிவிலவ் வான்றிருவே. (௱)

திருவாலவாயந்தாதி

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௬ | ௩ | ௭ | டரியினானனு | டரியினானனனு |
| ௧௧ | ௰ | ௧ | மூகை | முகை |
| ௨௩ | ௨௭ | ௮ | மத்தியு | மத்தியி |
| ௨௯ | ௩௫ | ௨ | வாரமரு | வாரமரு |
| ௩௩ | ௬௪ | ௧ | ராகத்து | ராகத்துப் |
| ,, | ,, | ,, | தெரூ | தெரு |
| ௩௫ | ௭௩ | ௨ | களிங்குங் | களிக்குங் |
| ,, | ௭௮ | ௧ | காளையார் | காளையர் |
| ௩௭ | ௯௩ | ௨ | கோடக | கோடக. |
| ௪௨ | ௨௰ | ௪ | பொற்கிணங | பொற்கிணங் |
| ௪௫ | ௪௮ | ௨ | குனறூர் | குன்றூர் |
| ௪௬ | ௫௧ | ௪ | நீலை | நிலை |
| ௫௰ | ௮௫ | ௪ | கந்தான | கந்தான் |
| ,, | ௮௭ | ௩ | நவின | நவின் |
| ௫௧ | ௮௮ | ௨ | மூடடு | மூட்டு |
| ௫௪ | ௰ | ௨ | யங்கட்டு | யங்காட்டு |
| ௫௮ | ௪௧ | ௨ | வீத்தம்பூ | வித்தம்பூ |
| ௫௯ | ௪௪ | ௨ | சிங்கவன | சிங்கவன் |
| ௬௰ | ௫௬ | ௩ | தன்னடைந்தார் | தன்னடையார் |
| ௬௫ | ௯௨ | ௪ | தேசிகனார | தேசிகனார் |
| ,, | ௯௪ | ௧ | கூர்ந்த் | கூர்ந்த |
| ௬௮ | ௯ | ௪ | மாருர் | மாரூர் |
| ௭௰ | ௨௩ | ௧ | வானான் | வானாண் |
| ௭௩ | ௪௫ | ௩ | நீத்துட | நீத்துட் |
| ௭௫ | ௫௮ | ௨ | மாயிருஞ் | மாயிரு |
| ௭௬ | ௬௮ | ௪ | சென்னறி | சென்னெறி |
| ௭௮ | ௮௰ | ௩ | மமருள் | மருள் |
| ,, | ௮௪ | ௧ | மெயஞ் | மெய்ஞ் |
| ௮௰ | ௯௭ | ௩ | மாட | மாடக |
| ௮௧ | ௩ | ௩ | கண்டுடற | கண்டுடற் |
| ௮௨ | ௫ | ௩ | மலஙக | மலங்க |
| ,, | ௬ | ௪ | மாறற | மாற்ற |
| ,, | ,, | ,, | தென | தென் |
| ௮௩ | ௰௩ | ௩ | லேன்ற | லென்ற |
| ,, | ௰௪ | ௨ | மூற்றே | முற்றே |
| ௮௫ | ௩௩ | ௨ | தமிழ் | தமிழ்க் |
| ௮௬ | ௩௭ | ௪ | குறித்தே | குரித்தே |
| ௯௨ | ௮௰ | ௩ | குமதி | குமகி |